# கல்கி




KALKI ஏப்ரல் 29, 1951 4 அணா

# இச்சிறு கைகள் விளையாடுகின்றன, ஆனால்...

# ...விளையாடும் கைகளும் அழுக்கடைகின்றன!

அழுக்கடைந்த கைகள்

## மறைந்திருக்கும் அபாயத்தைத்

தாங்குகின்றன!

அழுக்கில் கண்களுக்கு
புலப்படாத கிருமிகள் இருப்பதால்!




லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது!

L. 141-50 TM

# எல்லையற்ற இரவுகள்

கண்ணுக்கும்
கருத்துக்கும்
விருந்தளிக்கும்
படம்!

மே 4 முதல்
சென்னையில் 4
தியேட்டர்களிலும்
..எதிர்பாருங்கள்...
ஏப்ரல் 27 முதல்
பாரகனில் மட்டும்
முன்னதாகவே டிக்கட்
விற்கப்படும்.

AVM
புரொடக்ஷன்ஸ்

ஏவி எம் புரொடக்ஷன்ஸ்

# ஓர் இரவு



இப்பொழுது தமிழ்நாடெங்கும்
நடைபெறுகிறது

கதை, வசனம்:
C.N. அண்ணாத்துரை M.A.,

டைரக்ஷன்:
P. நீலகண்டன்.

உங்கள்
மோட்டாரில்
எண்ணெய்
சமீபமாக
எப்பொழுது
மாற்றப்
பட்டது
?




BSY 218 TM

# பொன் விழா விற்பனை!

விசேஷ கவனத்துடன் தயார் செய்யப்பட்டவை
ஒவ்வொன்றும் ஐந்து வருட உத்திரவாதம்

No. 1



| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவல் | க்ரோம் 32/- | ரோல்டுகோல்டு | 35/- |
| 7 ,, | க்ரோம் 37/- | ரோல்டுகோல்டு | 40/- |
| 15 ,, | க்ரோம் 46/- | ரோல்டுகோல்டு | 48/- |

No 2



| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவல் | க்ரோம் 31/- | ரோல்டுகோல்டு | 35/- |
| 7 ,, | க்ரோம் 33/- | ரோல்டுகோல்டு | 37/- |
| 15 ,, | க்ரோம் 45/- | ரோல்டுகோல்டு | 47/- |

No 3



| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவல் க்ரோம் | 22/- | உயர்ரகம் | 24/- |
| ரேடியத்துடன் | 24/- | சென். செகண்டு | 25/- |

வாட்டர் புரூப் 15 ஜுவல் 60/-

No.



| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவல் | க்ரோம் 32/- | ரோல்டுகோல்டு | 34/- |
| 7 ,, | க்ரோம் 34/- | ரோல்டுகோல்டு | 36/- |
| 15 ,, | க்ரோம் 48/- | ரோல்டுகோல்டு | 56/- |

No 5



| | | | |
|---|---|---|---|
| 5 ஜுவல் க்ரோம் | 24/- | உயர்ரகம் | 27/- |
| 5 ,, ரோல்டுகோல்டு | 30/- | உயர்ரகம் | 32/- |
| 15 ,, க்ரோம் | 45/- | உயர்ரகம் | 48/- |
| இங். டைம்பீஸ் | 24/- | உயர்ரகம் இங். | 25/- |
| பாக்கெட் வாட்ச் | 12/- | உயர்ரகம் | 15/- |

பாக்கிங், போஸ்டேஜ், விற்பனை வரி இலவசம்

**CARONA WATCH CO.**
Post Box No. 6729, Calcutta 7



## 'கோலினாஸ்' புன்னகையில் வெற்றி நடனமாடுகிறது!

நுரை தான் இந்த வித்தியாசத்திற்குக் காரணம்!

அதி சிக்கனமான துலக்கட—ஏனெனில் அரை அங்குல அளவே போதுமானது!





சாயமில்லாத பிரஷில் உபயோகிப்பதே உத்தமம்

இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:
ஜியாப்ரே மானர்ஸ் & கோ. லிட்.
பம்பாய் 1.
கிளைகள்: கல்கத்தா-மதராஸ்-டில்லி.


Firestone





---





கே. & கே. புரொடக்ஷன்ஸ்
தயாரித்த

# "ஜீவித நௌகா"

பாட்டுகள்

★

N. 28230
ஸ்ரீமதி கவியூர் ரேவம்மா &
எச். மெஹ்பூப்
பாஹி தாயே
தேடினரோ யாரும்

N. 28232
ஸ்ரீமதி கவியூர் ரேவம்மா
வீதிகளில்
பசியால் உயிர் வாடி

N. 28231
ஸ்ரீமதி கவியூர் ரேவம்மா
நீயேதான் மனோஹரா
கதியேதுமில்லே

N. 28245
ஸ்ரீமதி கவியூர் ரேவம்மா & பார்டி
மேரிமக்தலின் பாட்டு
2 பாகங்கள்

ரோஹிணி பிக்சர்ஸ்
தயாரித்த

# "நிரபராதி"

பாட்டுகள்



N. 28235
ஸ்ரீ கண்டசாலா &
ஸ்ரீமதி பி. ஜி. கிருஷ்ணவேணி (ஜிக்கி)
பாரத தேவி
ஸ்ரீ கண்டசாலா & ஸ்ரீமதி சுந்தரம்மா
ஸ்வாகதம்

N. 28236
ஸ்ரீமதி ஏ. வி. சரஸ்வதி
லோகமய்யா லோகமாம்
ஸ்ரீமதி பி. ஜி. கிருஷ்ணவேணி (ஜிக்கி)
லாலி லாலி கண்ணே

N. 28237
ஸ்ரீமதி ஜி. வரலக்ஷ்மி
நானே ராணியே
ஞான சங்கீதமே

## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

தி கிராமபோன் கம்பெனி லிமிடெட்
கல்கத்தா — பம்பாய் — மதராஸ் — டில்லி

# இன்று உங்கள் பற்களை **மக்ளீன்** செய்தீர்களா?



"நான் எத்தனையோ
டூத் பேஸ்டுகளைச்
சோதித்திருக்கிறேன்.
மக்ளீன்ஸ் போல
சிறந்த தொன்றை
இதுவரை கண்டதில்லை
என் பற்கள் எவ்வளவு
நன்றாயிருக்கின்றன
என்று என் நண்பர்கள்
எல்லோரும் பாராட்டு
கிறார்கள்."

வாயைச் சுத்திகரித்து
மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது.

உமிழ்நீர்
கெடுதலைத் தடுத்து
ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
வெண்மை
தருகிறது.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் டூத் பேஸ்ட் உபயோகிக்கும்போது நீங்கள் உங்கள் பற்களுக்கும், ஈறுகளுக்கும் சிறந்த பாதுகாப்பு அளிக்கிறீர்கள். பற்கள் வெண்ணிறமாகி பளபளக்கிறது; அதே சமயத்தில் சுவாசத்திலும் நறுமணம் உண்டாகிறது. அதனால்தான் லக்ஷக் கணக்கான மக்கள் மக்ளீன்ஸைத் தவிர வேறு எதையும் உபயோகிப்ப இல்லை.

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்!**




MTX-6 TM

கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின் பெருமையையும் அவர் இந்தியாவுக்கு ஆற்றி யிருக்கும் அருந் தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் அழகாக விளக்கி யிருக்கிறார்

(விலை அணா எட்டு)

( தபால் செலவு தனி )

•

**சசிதேவி** எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0

( தபால் செலவு தனி )

•

கிடைக்குமிடம் :

"கல்கி" காரியாலயம்

கீழ்ப்பாக்கம் :: சென்னை

## மெஸர்ஸ். கேசரி குடீரம் லிட்.

பொன் விழா வைபவம்

★

லோத்ரா முதலிய பிரபல மருந்துகளைத் தயாரிப்பவர்களான மெஸர்ஸ். கேசரி குடீரம் லிமிடெட், தங்களது பொன் விழாக் கொண்டாட்டத்தை ராயப்பேட்டையிலுள்ள அவர்களது கம்பெனியின் கட்டிடத்தில் சென்ற மாதம் வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள். அச்சமயம் நடந்தேறிய வரவேற்பு உபசாரத்தின்போதும் சங்கீதக் கச்சேரியின்போதும் கம்பெனியின் அபிமானிகளும், ஆதரவாளர்களும், மந்திரிகளும், நீதிபதிகளும் மற்றும் அநேக பிரபலஸ்தர்களும் விஜயம் செய்து கௌரவித்தனர்.

# மிட்லண்ட்

**தினசரி 3 காட்சிகள் : மாலை 3-30, 6-30 & இரவு 9-30 மணி**

**ஞாயிறு காலை காட்சி 10 மணி**




கண்ணிறைந்த காட்சிகள் பலவும் நிறைந்தது

குறிப்பு:—கட்டண உயர்வு கிடையாது. ரூ. 2-9-0, 1-14-0, 1-4-0 டிக்கட்டுகள் முன்னதாகவே வாங்கிக்கொள்ள வசதி உண்டு.




# அப்பழுக்கற்ற சேவைக்கு ஒவ்வொரு டெஸ்லா ரேடியோவும் தனித்தனியே பரிசோதிக்கப்பட்டு நிர்மாணிக்கப்பட்டுள்ளது

**கீழ்க்கண்ட சிருஷ்டிகளில் பிரியமானதைப் பொருக்கி எடுத்துக் கொள்ளுங்கள்**



**டெஸ்லா லார்கோ**

8 வால்வ் சக்தி கொண்ட இணையற்ற 8 சூப்பர்ஹெட் இயல் பர்பன் வால்வுடன் கொண்டது. கவர்ச்சியான அழகிய வால்நட் காபினெட்டில் ஏ. ஸி. மெயினில் இயங்குமாறு பொருத்தப்பட்டது. விலை ரூ. 620/-



**டெஸ்லா ஏரி**

6 சக்தியுள்ள இயக் பர்பன் வால்வு ரிங்குடன் அழகிய வால்நட் காபினெட்டில் பொருத்தப்பட்டது. மீட்டர் அலைகளிலும் மீட்டரிலும் ஏ. ஸி. மெயினில் இயங்குமாறு இந்தியடைபல் கொண்டது. விலை ரூ. 390



**டெஸ்லா பயனீர்**

5 இயக் பர்பன் வால்வு ஏ. ஸி., டி. ஸி. செட். வசீகரமுள்ள பிளாஸ்டிக் காபினெட்டில் பொருத்தியது. விலை ரூ.335

இன்றே உங்கள் டெஸ்லா டீலரிடம் சென்று பார்வையிடுங்கள் :

டெஸ்லா (இந்தியா) ரேடியோ மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்
11/13, ஹார்னிமான் சர்க்கிள், பம்பாய்-1



# பொருள் அடக்கம்

கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 10
இதழ் 39

1951 ஏப்ரல் 29

கர ஆ
சித்திரை 16உ



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## அட்டைப்பட விளக்கம்

தமிழ்க் கடவுள் முருகப் பெருமானுக்குத் தமிழ் கூறும் நல்லுலகத்தின் மீது எவ்வளவு காதல்! தமிழகத்தில் எங்கேயாவது சிறு குன்று இருந்தால் போதும், அதைத் தனக்கு உடைமை யாக்கிக் கொண்டு அதன் மீது விளையாடத் தொடங்கி விடுகிறான். ஒரு குன்றில் வள்ளி-தெய்வ யானை சமேதனாகத் தோன்றினால், இன்னொரு குன்றில் ஆண்டிப் பண்டாரமாகத் தோன்றித் தந்தைக்கும் ஞான குருவாக விளங்குகிறான். ஒரு குன்றில் ஒரு முகத்துடன் காட்சி தந்தால், இன்னொரு குன்றில் ஆறு முகத்துடன் காட்சி அளிக்கிறான். இப்படிப்பட்ட முருகப் பெருமானின் பெயரைச் சொன்னால் இமயம் முதல் தெற்கே கதிர்காமம் வரை வியாபித்திருக்கும் தமிழர் களுக்கு உள்ளத்தில் இன்பவுணர்ச்சிப் பெருகுவதில் அதிசயம் என்ன இருக்கிறது!

* * * *

தமிழ் நாட்டுப் பெண் ஒருத்தி முருகன் மீது காதல் கொண்டாள். அந்தக் காதலின் விளைவாக முருகனுடன் கூடிக் குலாவும் சந்தர்ப்பம் வாய்த்ததாம். அவ்வளவு தூரம் அவள் தலையெழுத்தும் சரியாக இருந்ததாம்! "இன்னும் ஒரு எழுத்து எழுதியிருக்க வேண்டும்; அதை எழுத அந்தப் பாவி பிரம்மன் மறந்து விட்டான்" என்று அங்கலாய்க்கிறாள்.

அந்த எழுத்து என்ன எழுத்து!

சரியாய் எழுதிவந்தும் தங்கவடி. வேலரென்னைப்
பிரியா எழுத்தெழுத—இளியே! பிரமன் மறந்தானடி!

கடவுள் விறகில் மறைந்து கிடக்கும் தீயைப் போலவும், பாலிற் படு நெய்யைப் போலவும் ஒவ்வொரு அணுவுக் குள்ளும் ஒவ்வொரு ஜீவனுக்குள்ளும் இருக்கிறான். இப்படித் தர்க்கரீதியாக உணர்ந்து மட்டும் பயனில்லை; அது ஆத்ம அனுபவமாக வேண்டும். இதற்குத்தான் பக்தர்கள் அரும்பாடு படுகிறார்கள். இப்படிப்பட்ட கடவுள் அனுபவம் உண்டாக அந்த ஈசனுடன்,

உறவு கோல் நட்டு உணர்வுக் கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன் நிற்குமே!

என்கிறார் அப்பர் பெருமான். இத்தகைய அநுபவத்தை ஒரு தடவை அடைந்தவர்கள் அது நீடித்திருக்கவில்லையே என்று வருந்துவது இயல்புதானே!

"ஏதோ ஒரு கணம் ஆண்டவனைத் துய்த்தேன். அந்த அநுபவ நேரம், முடி வில்லாமல் நீளக்கூடாதா! முருகனைப் பிரியாதிருக்கும் எழுத்து எழுத இந்தப் பிரமன் மறந்து தொலைத்து விட்டானே!" என்று ஜிளிக்கண்ணி ஆசிரியர் ஏங்குகிறார்.

உள்ளம் மறுபடியும் பக்குவமடைந்து, முருகன் பக்தியில் கனிந்தால், நிச்சயம் அவன் தோன்றுவான்! "முருகன் எங்கும் போய்விடவில்லை; அதோ உன் பின்னால் இருக் கும் மரத்தின் மறைவிலேதான் இருக்கிறான்" என்கிறார் நமது சித்திரக்காரர்.

# பூத பூஜை!




இந்தியர்களுக்குப் பிரஜா உரிமை அளிக்க மறுக்கும் இலங்கை சர்க்கார் ஹிட்லர், மலானின் இன வெறிக் கொள்கையைப் பின்பற்றுகிறார்கள் என்று இலங்கை இந்திய தேசிய மகாசபை கருதுகிறது.




# "முந்நூறு வயது வரம் கொடுங்கள்!"

இந்த அதிசயமான கணக்கைக் கேளுங்கள்!

இலங்கைத் தீவின் தோட்டப் பகுதிகளில் எட்டு லட்சம் தமிழ்ச் சகோதரர்கள் இருக்கிறார்கள். இலங்கைப் பிரஜா உரிமைச் சட்டத்தின்படி அவர்களில் பாதிப் பேராவது இலங்கைப் பிரஜைகளாவதற்குக் குறைந்த பட்சம் முந்நூறு ஆண்டுகள் செல்லும்!

அந்தச் சட்டத்தின்படி பிரஜா உரிமைக்கு மனுச் செய்வோர், உலகத்திலேயே வேறு எந்த நாட்டிலும் கண்டும் கேட்டும் இராத ஏராளமான நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டும்.

எனவே, சம்பந்தப்பட்ட அதிகாரி ஒரு நாளில் நாலு மனுக்களுக்கு மேல் விசாரித்து முடிவு செய்வது அசாத்தியமாக இருக்கிறது.

மேற்படி முடிவு சாதகமாக இருந்து, அந்த நாலு பேரையும் இலங்கையில் பிரஜையாகப் பதிவு செய்து கொண்டாலும் ஒரு வருஷத்தில் சுமார் ஆயிரத்து ஐந்நூறு இந்தியர்களை பதிவு செய்து கொள்ள முடியும்!

இந்தக் கணக்கின்படி நாலு லட்சம் பேர் இலங்கைப் பிரஜைகளாகப் பதிவாவதற்குச் சற்றேறக்குறைய மூன்று நூற்றாண்டுகள் ஆகி விடும்!

ஆனால் சர்க்கார் குறிப்பிட்டுள்ள கெடுவின்படி, 1951-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் ஐந்தாம் தேதிக்கு மேல் யாரும் மனுச் செய்து கொள்ள முடியாது. அதாவது இன்னும் மூன்று மாதங்களில் அவர்கள் பிரஜா உரிமைச் சட்டத்தின்படி பதிவு செய்து கொண்டு விட வேண்டும்.

இந்த நிலையில், "எங்களுக்கு முந்நூறு வயது வரம் கொடுங்கள்" என்று இலங்கை இந்தியர்கள் இலங்கைப் பிரதமர் ஸ்ரீ சேனநாயகாவிடம் பிரார்த்தனை செய்து கொள்வதைத் தவிர வேறு வழி என்ன இருக்கிறது?

• • •

இலங்கையில் வாழும் எட்டு லட்சம் இந்தியர்களில் பெரும்பாலோர் நேற்றோ இன்றோ அங்கு போய்க் குடியேறியவர்கள் அல்ல. தலைமுறை தலைமுறையாக அங்கேயே வசித்து வருகிறார்கள். பாடுபட்டுப் பண்படுத்தி இலங்கைக் காடுகளைப் பொன் கொழிக்கும் பூமியாகச் செய்த தனிப் பெருமை லட்சக் கணக்கான அந்த உழைப்பாளிகளையே சார்ந்தது.

இலங்கையின் தங்கச் சுரங்கங்களாக விளங்கும் தேயிலை, ரப்பர்த் தோட்டங்களுக்கு அங்கு வாழும் தமிழ்த் தொழிலாளர்களின் வியர்வையே சிறந்த உரமாக அமைந்தது. அவர்களின் இடைவிடாத உழைப்பே இலங்கையின் பொருளாதார சுபிட்சத்தை உருவாக்கியது.



ஸ்ரீ இராஜலிங்கம்.

இவ்வாறாக அந்த நாட்டின் சுக துக்கங்களில் இரண்டறக் கலந்து வந்திருக்கும் இந்திய சகோதரர்களின் இன்றையத் திண்டாட்டம் விவரிக்க இயலாததாக இருக்கிறது.

அந்த நாட்டில் வாழையடி வாழையாக வாழ்ந்து, அதையே தாயகமாகக் கொண்டிருக்கும் இந்தியர்களுக்குச் சுதந்திர இலங்கை சர்க்கார் பிரஜா உரிமை மறுக்கிறார்கள்.

இந்தியர்கள் அமெரிக்கா முதலிய வெளி நாடுகளிலோ, வெளி நாட்டினர் இந்தியாவிலோ பிரஜைகளாவது அரசியல் சட்டப்படி சுலபமாக இருக்கிறது. அப்படியிருக்க, இந்தியாவுடன் எல்லா விதத்திலும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள இலங்கையில், இலங்கையின் வளத்துக்காக அரும்பாடு பட்டுள்ள இந்தியர்களுக்கு ஏன் இத்தகைய துன்பம் ஏற்பட வேண்டும்?

நேர்மையற்ற இலங்கைப் பிரஜா உரிமைச் சட்டத்தைக் கண்டித்து ஏற்கெனவே இலங்கை இந்தியர் மகாசபை அதைப் பகிஷ்காரம் செய்திருந்தது. ஆனால் இலங்கை சர்க்காரிடம் தங்களுடைய நல்லெண்ணத்தைக் காட்டுவதற்காக இந்தியர்கள் சென்ற வருஷத்தில் பகிஷ்காரத் தீர்மானத்தை ரத்து செய்தனர். சர்க்காருடன் ஒத்துழைப்பதென்றும் முடிவு செய்தனர்.

அதன் பலனாக இலங்கை சர்க்காரின் பிடிவாதம் தணிந்து அவர்களுடைய மனம் தாராளம் அடையும் என்று யாவரும் எதிர்பார்த்தார்கள். ஆனால் ஒத்துழையாமைப் பாட்டுக்கு ஒரு தாழ்ப்பாள், ஒத்துழைப்புப் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள் என்ற ரீதியில் இலங்கை சர்க்கார் நடந்து கொண்டு விட்டார்கள்!

"இலங்கைப் பிரஜா உரிமைச் சட்டத்தைப் பகிஷ்காரம் செய்வது தற்கொலைக்கு ஒப்பாகும் என்று சொன்னார்கள். எனவே பகிஷ்காரத்தை விடுத்து ஒத்துழைப்பது என்றும் அச்சட்டப்படி பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ளுவது என்றும் தீர்மானித்தோம். இத்தீர்மானம் தூக்கிட்டுக் கொள்வதற்குக் கயிறு கேட்பதுபோல் ஆகி விட்டது!"

இலங்கை வத்துகாமத்தில் சென்ற வாரம் நடந்த இலங்கை இந்தியர் தேசிய மகாசபையின் வருஷாந்தரக் கூட்டத்திலே ஸ்ரீ கே. இராஜலிங்கம் நிகழ்த்திய தலைமையுரையில் மேற்கண்ட விதம் கூறியிருக்கிறார்.

முன்பு ஜெர்மன் நாஜியர்கள் எவ்வாறு நடந்து கொண்டார்கள்? இன்று தென்னாப்பிரிக்க சர்க்கார் எவ்விதம் நடந்து வருகிறார்கள்? அவர்கள் அனுஷ்டித்து வரும் முறைக்கும் இலங்கை சர்க்காரின் கொள்கைக்கும் அதிக வேற்றுமை இருப்பதாகத் தெரியவில்லை.

நாகரிக உலகத்தில் இத்தகைய அநாகரிகக் காட்டுமிராண்டிக் கொள்கை புகழையோ, பெருமையையோ, முடிவாக வெற்றியையோ கொடுக்குமா என்பதை இலங்கை சர்க்கார் சிந்தித்துப் பார்ப்பார்களாக!

# வெளியேறக் கூடாது!

ஆந்திர மாகாணத்தைப் பின்பற்றித் தமிழ் நாட்டிலும் சில காங்கிரஸ் வாதிகள் சிலர் காங்கிரஸிலிருந்து வெளியேறக்கூடும் என்ற வதந்தி உலாவுகிறது.

வதந்தியில் ஓரளவு உண்மையும் இருக்கலாம்; அல்லது அப்படி நடைபெறவேண்டும் என்று விரும்புகிறவர்கள் கட்டிவிட்ட கதையாகவும் இருக்கலாம்.

எப்படியானாலும், காங்கிரஸிலிருந்து வெளியேறும் காரியம் தவறானது என்பதை வற்புறுத்திக் கூற விரும்புகிறோம்.

பண்டித ஜவாஹர்லால் நேருவும் ராஜாஜியும் காங்கிரஸில் இருக்கும் வரையில் உண்மையான தேசபக்தர்களும் தொண்டர்களும் அந்த மகாசபையைப் புறக்கணிக்க முடியாது.

தனி மனிதர்கள் எவ்வளவு பெரியவர்களாயிருந்தாலும் அவர்களைக் காட்டிலும் காங்கிரஸ் ஸ்தாபனம் பெரியது என்று பல தடவை நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

காங்கிரஸ் ஸ்தாபனங்களில் ஊழல்கள் மலிந்துவிட்டன என்னும் புகார்களில் உண்மை இருக்கத்தான் செய்கிறது. ஆனால் சிலருள்ள காங்கிரஸ் வாதிகள் அந்த ஊழல்களைக் களைய முயலவேண்டும். இத்துறையில் முயற்சி செய்யும் அளவுக்குப் பலன் ஏற்படாமற் போகவில்லை. காங்கிரஸ் ஸ்தாபனத்தைப் புனிதப் படுத்துவதில் காங்கிரஸ் மேலோரும் சிரத்தை காட்டித்தான் வருகிறார்கள். சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு நடவடிக்கை எடுத்தும் வருகிறார்கள்.

நம் ஆந்திர சகோதரர்களின் போக்கு ஒரு தனிப்போக்கு. அவர்களைத் தமிழ் நாட்டில் நாம் பின்பற்ற வேண்டிய அவசியமில்லை.

காங்கிரஸுக்குள்ளே யிருந்து கூடியவரையில் அந்த ஸ்தாபனத்தைப் புனிதப்படுத்திப் பணியாற்ற முயல்வதுதான் முறை.

# எத்தனை நிலம் வேண்டும்?

தேர்தல் நெருங்கி வரும் இச் சமயத்தில் பொது மக்கள் நாட்டின் முன்னுல் உள்ள சில முக்கியமான பிரச்னைகளைப் பற்றிக் கவனம் செலுத்துவது அவசியம்.

அபேட்சகர்களின் தகுதி என்ன, அவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்று தெரிந்து கொள்வது முக்கியந்தான். அதோடு அவர்கள் என்ன கொள்கை உடையவர்கள் என்பதும் தெரிந்தால் நல்லதல்லவா!

வரப்போகும் தேர்தலுக்குப் பின் ஏற்படும் சட்டசபைகள் நிலப்பிரச்னையைத் தீர்த்துவைக்கும் அவசியம் கட்டாயம் ஏற்படும். அதாவது ஒரு தனி மனிதர் தமக்கென்று எத்தனை நிலம் வைத்துக் கொள்ளலாம் என்னும் பிரச்னை.

மகான் டால்ஸ்டாய் ஒரு அழகான கதை எழுதியிருக்கிறுர். "ஒரு மனிதனுக்கு எத்தனை நிலம் வேண்டும்!" என்று கேட்டுக் கொண்டு கதையைத் தொடங்குகிறுர். கதை நாயகன் ஓடியாடித் திரிந்து வெகு பாடுபடுகிறுன். நிலம் நிறையச் சேர்த்துக் கொள்வதற்காகத்தான். கடைசியில் அவனுடைய அந்திய காலத்தில், அவசியமாக வேண்டியது ஆறு அடி நிலமே என்று ஏற்படுகிறது! இறந்து போன பிறகு புதைப்பதற்கு அவ்வளவுதானே வேண்டும்! ஹிந்துக்களுக்கோ அவ்வளவு கூட வேண்டியதில்லை!

இத்தகைய வேதாந்த தத்துவ விசாரணை ஒரு புறமிருக்க, உயிரோடிருக்கும் போது ஒருவனுக்கு எவ்வளவு நிலம் தேவை என்ற கேள்வி எழுகிறது. இது பல நாடுகளிலும் ஆராய்ச்சி செய்யப்பட்டு வருகிறது. பர்மாவிலும், காஷ்மீரிலும் ஒரு தனி மனிதன் ஐம்பது ஏக்கராவுக்கு மேல் நிலம் வைத்திருக்கக் கூடாது என்று சட்டம் செய்திருக்கிறுர்கள்.

பாரத நாட்டிலும் இந்த விவாதம் சில காலமாக நடைபெற்று வருகிறது.

"உழுகிறவனுக்கே நிலம் சொந்தம்" என்ற கொள்கை சிலருடையது.

"போனுற் போகட்டும்; ஒரு மனிதன் ஐம்பது ஏக்கரா நிலம் வைத்துக்கொள்ளலாம். அதற்கு அதிகமாக வைத்துக் கொள்ளக் கூடாது" என்று சிலர் வற்புறுத்துகிறுர்கள்.

நாட்டில் பல்லாயிரக் கணக்கானவர்கள்,— உழுது பயிரிடும் வேலை செய்பவர்கள், நிலமே இல்லாமலிருக்கும் போது, ஒரு சிலர் ஆயிரம் ஏக்கரா, பத்தாயிரம் ஏக்கரா என்று வளைத்துக் கட்டிக் கொண்டிருப்பது என்ன நியாயம் என்று கேட்கிறுர்கள்.

மற்ருெரு கட்சியார், ஆலைகள், தொழிற்சாலைகள், வியாபாரங்கள், பங்குகள், ரொக்கப் பணங்கள் முதலியவற்றில் இவ்வளவுதான் வைத்துக் கொள்ளலாம் என்று வரையறை இல்லாத போது நிலச் சொத்துக்கு மட்டும் ஏன் வரையறை செய்ய வேண்டும் என்று கேட்கிறுர்கள். அதிக நிலம் வைத்திருந்தால் தான் நவீன முறையில் சாகுபடி செய்து உணவு உற்பத்தியைப் பெருக்கலாம் என்கிறுர்கள்.

இருதரப்பிலும் சொல்லக் கூடிய வாதங்கள் அநேகம் இருக்கின்றன. நேயர்கள் இந்த முக்கியமான பிரச்னையில் கவனம் செலுத்தித் தங்கள் கருத்துக்களைக் "கல்கி" ஆசிரியருக்கு எழுதும்படி கோருகிறேம்.

இருதரப்பிலும் வரும் கடிதங்களில் சுருக்கமாகவும் விவாத ரீதியாகவும் எழுதப்பட்டுள்ள கடிதங்களைக் "கல்கி"யில் வெளியிடுவோம்.

★ ஒவ்வொரு இதழிலும் பிரசுரமாகும் கடிதங்களில் சிறந்ததற்கு ரூபாய் பதினைந்து பரிசு அளிக்கப்படும்.

# தமிழ்த் திருவிழா

இந்த இதழ் நேயர்களின் கைக்கு வரும் போது யாழ்ப்பாணத்தில் நாலாவது தமிழ்த் திருவிழா நடைபெற்றுக் கொண்டிருக்கும்.

தமிழைப் புதிய முறையில் வளர்ப்பதற்கு முதன் முதலில் வழிகாட்டியவர், இலக்கண வழுவில்லாத தூய்மையான எளிய தமிழ் நடையை முதன் முதலில் கையாண்டவர், யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த ஸ்ரீ ஆறுமுக நாவலர் பெருமான் என்பதை நேயர்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேம். மற்றேர் இடத்தில் வெளியிட்டிருக்கும் தமிழ் விழா சம்பந்தமான படங்களின் தலைப்பில் தூய்மையான தவக் கோலத்தில் திகழ்கிறவர்தான் ஸ்ரீ ஆறுமுக நாவலர்.

தமிழ்த்திருவிழா நடக்கப் போகும் இடம் பரமேசுவரக் கல்லூரி மைதானம். அக் கல்லூரியை அமைத்தவரும் இலங்கைத் தமிழர் சமூகத்துக்குப் புத்துயிர் தந்தவருமான ஸர் பொன்னம்பலம் ராமநாதன் (தலையில் தலைப்பாகையுடன்) எதிர்ப்புறத்தில் காட்சி தருகிறுர். அத்தகைய பெரியவரின் நூற்றுண்டு விழா ஏப்ரல் 28உ அதே இடத்தில் நடைபெறுகிறது.

தமிழ்த்திருவிழாவின் தலைவர் ஸ்ரீ கி. ஆர். சீனிவாசன், திறப்பாளர் ஸ்ரீ சண்முகம் செட்டியார், வரவேற்பு சபைத் தலைவர் திரு எஸ். நடேசன், கண்காட்சித் திறப்பாளர் ஸர் கந்தையா வைத்தியநாதன், கொழும்புத் தமிழ்ச் சங்கத் தலைவர் அருள்நந்தி, தமிழ் நாட்டிலிருந்து சொற்பொழிவு ஆற்றவரும் மும்மணிகளான ஆசிரியர் சேதுப்பிள்ளை, மீனுட்சிசுந்தரனுர், வரதராஜனுர், வீரத் தமிழர் சிவஞான கிராமணியார், காரியதரிசிகள் திரு நவரத்தினம், அம்பிகைபாகன் ஆகியவர்கள் ஸ்ரீ ஆறுமுக நாவலருக்கும் ஸர் பி. ராமநாதனுக்கும் இடையில் நமக்குச் சமூகம் தருகிறுர்கள். இவ்வளவு பேரையும் ஒரு மிக்கப் பார்த்துக் கேட்கப் போகும் இலங்கைத் தமிழர்களின் பேற்றினைப் பாராட்டுகிறேம்.



★

ஸ்ரீ ராமகிருஷ்ண கிருபா நாடக சபையார் ஏப்ரல் 14உ தமிழ் வருஷப் பிறப்பன்று ''சிவகாமியின் சபதம்'' நாடகத்தை அரங்கேற்றினர்கள். நாடகத்தில் நடித்த முக்கிய நடிகர்களை இங்கே காணலாம்.

★

# சிவகாமியின் அரங்கேற்றம்

தமிழ் ஆண்டுப் பிறப்பன்று தமிழ்க் கலை உலகில் ஓர் அபூர்வ நிகழ்ச்சி நடந்தேறியது. அன்று சிவகாமி அரங்கமேடை ஏறினாள். கதையில் வருவதுபோல் அரங்கேற்றம் முதல் அத்தியாயத்திலேயே தடைப்பட்டு நின்றுவிடவில்லை. கதையின் தொடக்கத்திலிருந்து சிவகாமி தன்னையும் தன் கலையையும் சிவபெருமானின் தாளில் சமர்ப்பித்தது வரையில் நாலு மணி நேரத்தில் உணர்ச்சி ததும்பும் சிறந்த நாடகமாக நடந்து முடிந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் கிருபையினால், ஸ்ரீ ராமகிருஷ்ண கிருபா நாடக சபையார் அந்தத் திருப்பணியை நடத்தி வைத்தார்கள். கலை ஆர்வமும் இலக்கியப் பற்றும் உள்ள ரஸிகர்கள் பூரண திருப்தி அடையும் முறையில் நடத்தி அமோக வெற்றி அடைந்தார்கள்.

சிக்கல்கள் நிறைந்த நெடிய பெரிய கதை. சரித்திரத் தொடர்பு கொண்டது. பாத்திரங்களும் நிகழ்ச்சிகளும் பல. நடக்கும் இடங்களும் அவ்விதமே. ஆதலின், இக்கதையை நாடகமாக நடத்துவது இயலாத காரியம் என்றே கதை எழுதிய ஆசிரியர் உள்படப் பலரும் கருதினார்கள். ஆனால் அதை நாடகமாக்கி நடத்த முடியும் என்ற நம்பிக்கையும் நடத்தியே தீருவது என்ற உறுதியும் ஒருவருக்கு இருந்தது. அவர்தான் டாக்டர் வி. ராமமூர்த்தி என்னும் கலை அன்பர். (ஸ்ரீ வி. சி. கோபாலரத்தினம் அவர்களின் மருகர்). இவருக்கு ஸ்ரீ கோவிந்தன் என்னும் இளம் நடிகரும் ஸ்ரீ வி. கே. பார்த்தசாரதி ஐயங்கார் என்னும் முதிர்ந்த அநுபவசாலியும் உதவி செய்தார்கள். முக்கிய சம்பவங்களை விடாமலும் கதையின் தொடர்பு கெடாமலும் கதையை நாடகமாக அமைத்துக் கொடுத்தார்கள்.

நாடகமாக்கி விட்டால் போதுமா! நல்ல முறையில் நடிக்க வேண்டாமா! கதையைப் படித்திருக்கும் ரஸிகர்கள் மிக்க ஆர்வத்துடன் வருவார்கள் என்றும், இலகுவில் அவர்களைத் திருப்திப் படுத்த முடியாது என்றும் எதிர்பார்க்கக் கூடியதுதான். சிவகாமியின் அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும்: ரஸிகர்கள் திருப்தி யடைந்தது மட்டுமல்லாமல் அபாரமான குதூகலம் அடையும் விதத்தில் நாடகம் நடிக்கப் பட்டது.

நடிகர் அனைவரும் பண்பாடு பெற்ற அறிவாளிகள். கதைப் போக்கையும் பாத்திரங்களின் மனோ தத்துவத்தையும் கதை நடந்த காலஇயல்பையும் நன்கு தெரிந்து நடித்தார்கள்.

மகேந்திர பல்லவனுடைய உள்ளத்தில் புதல்வனிடம் பாசமும், கலை அன்பும், இராஜ்யத்தின் மேன்மையும், தர்மத்தில் பற்றும் போட்டியிட்டன. அதனால் ஏற்பட்ட உள்ளக் கொந்தளிப்பை அபூர்வமாக வெளிப்படுத்தி டாக்டர் ராகவாச்சாரியார் நடித்தார்.

பரத நாட்டியக் கலையையும் அபிநயக் கலையையும் நன்கு பயின்று, அத்துடன் நடிப்புத் திறமையும் பெற்றிருந்த என்ஜினியர் ஸ்ரீ ராமமூர்த்தி கதாநாயகியாக நடிப்பதற்கு வாய்த்தது ஒரு பெரிய அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும். சிவகாமியின் நடிப்புச் சிறிதேனும் சோடையாகப் போயிருந்தால், நாடகத்திற்கு இத்தகைய மகத்தான வெற்றி எப்படிக் கிட்டியிருக்க முடியும்!

கதாநாயகன் மாமல்லன் உத்தமப் புதல்வன்; அமர காதலன்; அருமையான நண்பன்; சுத்த வீரன்; இராஜ்யத்தின் நலனுக்காகத் தனது வாழ்வின் இன்பத்தைத் தியாகம் செய்யத் துணிந்தவன். இவ்வளவு அரிய குணங்களும் நன்கு வெளியாகும்படியாக நடித்து ஸ்ரீ வரதராஜன் புகழ் பெற்றார்.

பட்டிக்காட்டிலிருந்து முரட்டு வாலிபனாகக் காஞ்சிக்கு வந்த பரஞ்சோதி வீராதி வீரனாகி அரும் பெருஞ் செயல்கள் புரிந்தான். பல்லவ சேநாதிபதி பதவி வகித்து வாதாபிக் கோட்டையை அழித்த பிறகு, போர்த் தொழிலை வெறுத்து, சிவனடியார் சிறுத் தொண்டராகப் புனர் ஜன்மம் எடுத்தான். இந்தப் பாத்திரத்தை நன்கு நடித்த ஸ்ரீ சுந்தரதேசிகன் வாழ்க.

சிவகாமியையும் அவளுடைய கலையையும் தமக்கே உரிமையாக்கிக் கொள்ளப் பார்த்தார் நாக நந்தி பிக்ஷு. அந்த முயற்சியில் அவர் வெற்றி பெறவில்லை. ஆனால் இங்கே நாடக மேடையை ஏறக்குறையத் தமக்கே உரிமையாக்கிக் கொண்டு விட்டார். நாகநந்தி மேடையில் தோன்றிக் கனல் வீசும் மொழிகளைப் பொழிந்து விட்டுச் சென்ற ஒவ்வொரு தடவையும், சபையோரின் ஆரவார கரகோஷத்தைப் பெற்றார். நாகநந்தி மட்டும் இந்த நாடகத்துக்கு வந்து பார்த்திருந்தால், நடிப்புத் திறமையில் தம்மைவிட டாக்டர் வி. ராமமூர்த்தி ஒரு படி மேல் என்று கட்டாயம் ஒப்புக் கொண்டிருப்பார்!

கமலி, கண்ணன், புலிகேசி, மகேந்திர பல்லவர் பட்டமகிஷி, ஆயனர், பாண்டிய குமாரி, —வேடங்களில் நடித்தவர்கள் அந்தந்தப் பாத்திரங்களை மனதில் பதியச் செய்து விட்டார்கள்.

பாட்டு, பேச்சு, காட்சி ஜோடனை, பின்னணி சங்கீதம் ஆகிய பல அம்சங்களிலும் "சிவகாமியின் சபதம்" சிறந்து விளங்கியது.

முதன் முதலில் அரங்கேற்றி நடித்த நாடகமாதலால், ஆங்காங்கு சிற்சில சிறிய குறைபாடுகள் தோன்றின. அறிவும் ஆற்றலும் வாய்ந்த இச் சபை அங்கத்தினர் அவற்றை அடுத்த தடவை நடிக்கும்போது போக்கிக் கொள்வார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

தமிழ் அரங்கமேடைக்கு ஒரு புதிய சரித்திர நாடகத்தை ஆக்கித் தந்த ஸ்ரீ ராமகிருஷ்ண கிருபா நாடக சபையாருக்கும் அச்சபையின் முதுபெரும் தலைவர் ஸ்ரீ சி. ராமாநுஜாச்சாரியார் அவர்களுக்கும் நமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



★

புது டில்லியில் தமிழ் நாட்டுப் பார்லி மெண்டு அங்கத்தினர் தமிழ் வருஷப் பிறப்புக் கொண் டாடினார்கள். அச்சந்தர்ப்பத்தில் அரங் கேறியது கீழ்க்கண்ட அழகிய பாடல்.

★

# தமிழன்னை தந்த செல்வம்

## டி. வி. சுவாமிநாதன்

குலமும் ஒன்றே மனித குலம்;
குறிக்கோள் ஒன்றே அறம் செய்தல்;
யாதும் ஊரே மாநிலத்தில்;
யாவரும் உறவினர், பேதமில்லை,—
என்று நடந்த சான்றோரில்
ஏற்றம் படைத்தவர் (இ)ராஜாஜி!

அழகெனும் தத்துவம் மலர் உருவில்
அன்வயம் ஆவது கண்கூடு!
வாய்மையும் தூய்மையும் காந்தியெனும்
வடிவில் கண்டது நம்நாடு!

சீலம் பொறுமை அறிவாற்றல்,
சிரித்த வதனம் திடசித்தம்,
இன்பத் தென்றல் குலவிடினும்
துன்பக் கடலலை குமுறிடினும்

உள்ளம் ஏற்ற கொள்கையிலே
ஊன்றிய பார்வை உறுதிநிலை,
உயர்வும் தாழ்வும் ஒன்றெனவே
உணர்வும் அத்வித மனப்பாங்கு —
"சி. ஆர்." எனுமிச் செல்வத்தைச்
செகத்திற் கீந்தாள் தமிழன்னை!

# பொன்னியின் செல்வன்

அத்தியாயம் 56

## அந்தப்புர சம்பவம்

பல நூற்றாண்டுகளுக்கு முன்னால் காஞ்சியில் மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி அரசு புரிந்த காலத்தில் நாடெங்கும் மகாபாரதக் கதையைப் படிப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தார். பௌத்த சமண மதங்களின் பிரசாரத்தினால் மக்கள் சாதுக்களாகப் போயிருந்த தமிழ் நாட்டில் மீண்டும் வீர உணர்ச்சி தளிர்த்துப் பரவ வேண்டும் என்பதற்காக அந்த ஏற்பாடு செய்தார். பாரதக் கதை படிப்பதற்கென்றே பல ஊர்களில் பாரத மண்டபங்கள் கட்டினார். அவர் தொடங்கிய ஏற்பாடு இன்னமும் தொண்டை மண்டலத்தில் தடைப்படாமல் நடந்து வந்தது. இரவில் மக்கள் மண்டபங்களிலோ திறந்த வெளியிலோ கூடிப் பாரதக் கதை கேட்டார்கள். பாரதப் பெருங் கதையையும் பாரதத்திலுள்ள கிளைக் கதைகளையும் பாட்டிலும் பண்ணிலும் வசனத்திலும் அமைத்து வீரா வேசத்துடன் சொல்லக் கூடிய பாடினிகள் பலர் தோன்றினார்கள்.

அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை சென்றிருந்த போது மணிபுரியை அடுத்த வனத்தில் மணிபுரி ராஜகுமாரியான சித்ராங்கியைக் கண்டான். இருவரும் காதல் கொண்டார்கள். சித்ராங்கிக்கு அரவான் என்னும் அருமைப் புதல்வன் பிறந்தான். மலை நாட்டுக் கோமகளுக்கு அர்ச்சுனனால் பிறந்த மகனாதலால் அரவான் மகா வீரனாயிருந்தான். பாரத யுத்தம் நடக்கப் போகிறது என்று அறிந்து அவனும் பாண்டவர் படையில் சேர வந்து சேர்ந்தான். போர் தொடங்குவதற்கு முன்னால் சகல இலட்சணங்களும் பொருந்திய மகாவீரனை இளைஞன் ஒருவனைக் களபலி கொடுக்க வேண்டும் என்ற பேச்சு வந்தபோது, "இதோ நான் இருக்கிறேன்; என்னைக் களபலியாகக் கொடுங்கள்!" என்று அரவான் முன் வந்தான். அவனைக் காட்டிலும் சிறந்த வீரன் யாரும் பாண்டவர் பக்கத்தில் இல்லாதபடியால், தானாக முன் வந்த அரவானையே பலி கொடுக்க வேண்டியதாயிற்று.

தன்னுடைய கட்சியின் வெற்றிக்காகத் தன் உயிரைத் தியாகம் செய்த வீர அரவானின் கதை தமிழ் மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. துரோபதை அம்மனுக்குக் கோயில் கட்டிய இடங்களிலெல்லாம் பக்கத்தில் அரவானுக்கும் கோயில் கட்டி திருவிழா நடத்தினார்கள்.

கல்கி

மாமல்லபுரத்து ஐந்து ரதங்களின் அருகில் அன்றிரவு நடந்த அரவான் கதை முடிவடைந்து விட்ட

தாகத் தோன்றியது. "மூன்று உலகமும் உடைய சுந்தரசோழ சக்கரவர்த்தி வாழ்க!" "கோப்பர கேசரி ஆதித்த கரிகாலர் வாழ்க!" என்று பல குரல்களில் எழுந்த கோஷங்கள் காற்றிலே மிதந்து வந்தன. கதை கேட்டுக் கொண்டிருந்தவர்கள் எழுந்து கலையத் தொடங்கினார்கள்.

"கதை முடிந்துவிட்டது. மலையமான் சிறிது நேரத்தில் திரும்பி வந்து விடுவார்!" என்றான் கரிகாலன்.

"அரவான் கதை முடிந்தது; ஆனால் தாங்கள் சொல்லி வந்த கதை இன்னும் முடியவில்லையே?" என்றான் பார்த்திபன்.

"இந்தப் பிராயத்தில் மலையமானின் மனோ திடத்தைப் பார்! இன்னமும் நடுநிசி வரையில் கண் விழித்துக் கதை கேட்கப் போகிறார், பார்!" என்றான் கரிகாலன்.

"தொண்டு கிழமாகிற வரையில் உயிரோடிருப்பது அவ்வளவு அதிசயமான காரியமா! ஊரில் எத்தனையோ கிழவர்கள் இருக்கிறார்கள். இரவில் தூக்கம் பிடியாமல் கதை கேட்கப் போகிறார்கள்!......"

"திருக்கோவலூர் மிலாடுடையாரை அப்படிச் சாதாரண கிழவர்களோடு சேர்த்து விடுகிறாயா? எத்தனை போர்க்களங்களைப் பார்த்தவர் அவர்? மலையமானின் வயதில் நாம் உயிரோடிருப்போமா என்பதே சந்தேகம். இருந்தாலும், அவரைப்போல் திடமாயிருக்க மாட்டோம்."

"அரசே! பழைய காலத்து மனிதர்கள் திடமாயிருப்பதற்குக் காரணம் இருக்கிறது......"

"அது என்ன காரணம்?"

"அவர்கள் பெண்களின் மோக வலையில் சிக்குவதில்லை. கேவலம் ஓர் அர்ச்சகரின் மகளிடம் மனதைப் பறிகொடுத்து விட்டு அவளை நினைத்து உருகிக் கொண்டிருப்பதில்லை. அப்படி எந்தப் பெண்ணிடமாவது மனம் சென்றால் அவள் கூந்தலைப் பற்றி இழுத்துக் கொண்டு வந்து அந்தப்புரத்தில் சேர்த்து விட்டு, வேறு வேலையைப் பார்ப்பார்கள்!......"

"பார்த்திபா! நந்தினி உண்மையில் அர்ச்சகர் வீட்டுப் பெண் அல்ல; அவளுடைய பிறப்பைக்குறித்து ஏதோ ஓர் இரகசியம் இருக்க வேண்டும்!....."

"நந்தினி யாருடைய மகளாயிருந்தால் என்ன? அர்ச்சகர் மகளாயிருந்தால் என்ன? அரசர் மகளாயிருந்தால் என்ன? அல்லது அநாதைப்பெண்ணாயிருந்தால் தான் என்ன? அந்த இன்னொரு கிழவர் பெரிய பழுவேட்டரையரைப் பாருங்கள்! எங்கேயோ வழியில் அவளைப் பார்த்தார்; உடனே இழுத்துக் கொண்டு வந்து எட்டோடு ஒன்பது என்று அந்தப்புரத்தில் அடைத்தார்......"

"நண்ப! அதை நினைத்தால் எனக்கு அதிசயமாகத்தான் இருக்கிறது!..."

"எதை நினைத்தால்? அந்தக் கிழவர் எப்படி இவளுடைய வலையில் சிக்கினார் என்பதைத் தானே?"

"இல்லை, இல்லை! ஒரு காலத்தில் என்னைக் காதலித்ததாகச் சொன்னவள், பிறகு வீர பாண்டியனைக் காதலித்து அவன் உயிரைக் காப்பாற்ற முயன்றவள், இந்தத் தொண்டு கிழவரை மணந்து கொள்ள எவ்வாறு சம்மதித்தாள்? அதை நினைத்தால் தான் அதிசயமாயிருக்கிறது."

"எனக்கு அது ஒன்றும் அதிசயமாகத் தோன்றவில்லை, ஐயா! தங்களுடைய செயலை நினைத்தால் தான் அதிசயமாயிருக்கிறது! சோழ குலத்தின் பரம வைரியான பாண்டியன்,—தோல்வியடைந்ததும் ஓடி ஒளிக்கும் கோழையினும் கோழையானாலும் 'வீர பாண்டியன்' என்று பெயர் சூட்டிக் கொண்டவன்,—அவனுக்கு அடைக்கலம் கொடுத்து உயிர்ப் பிச்சை கேட்டவளைத் தாங்கள் சும்மா விட்டுவிட்டு வந்தீர்களே? அதை எண்ணினால் தான் அதிசயத்திலும் அதிசயமாயிருக்கிறது. ஒன்று அவளையும் அங்கேயே கத்தியால் வெட்டிப் போட்டிருக்க வேண்டும்; அதற்கு விருப்பமில்லாவிட்டால் காலையும் கையையும் சேர்த்துக் கட்டிச் சிறைப்படுத்தி வந்திருக்க வேண்டும்! இந்த இரண்டில் ஒன்று செய்யாமல் சும்மா விட்டுவிட்டு வந்தீர்களே!...... இப்போது எனக்குக் கூட ஞாபகம் வருகிறது, அரசே! அந்தக் குடிசையின் வாசலில் தாங்கள் வீர பாண்டியன் உடலைத் தூக்கிக் கொண்டு வந்து போட்டீர்கள். நாங்கள் அனைவரும் வெறி கொண்டவர்களைப் போல் வெற்றி முழக்கம் செய்தோம். அதற்கு

நடுவில் குடிசைக் குள்ளேயிருந்து விம்மல் சத்தம் ஒன்று வந்தது. 'அது யார்?' என்று நான் கேட்டேன். 'யாரோ அர்ச்சகர் குடும்பத்துப் பெண்கள். ஏற்கெனவே அவர்கள் பீதியடைந்து கதி கலங்கிப் போயிருக்கிறார்கள். நீங்கள் யாரும் உள்ளே போக வேண்டாம்!' என்றீர்கள். வெற்றி வெறியில் இருந்த நாங்களும் அதைப் பொருட்படுத்தவில்லை. உடனே எல்லாருமாக வீர பாண்டியனுடைய தலையை எடுத்துக் கொண்டு கிளம்பினோம். தாங்களும் எங்களுடன் வந்தீர்கள். ஆனால் எங்கள் களிப்பிலும் கொண்டாட்டத்திலும் அவ்வளவாகத் தாங்கள் கலந்து கொள்ளவில்லை. உற்சாகம் குன்றிக் காணப்பட்டீர்கள். நான் காரணம் கேட்டேன். தாங்கள் ஏதோ சமாதானம் சொன்னீர்கள். தங்களுக்கு ஏதேனும் பலமான காயம் பட்டிருக்குமோ என்று நான் சந்தேகித்துக் கேட்டது கூட எனக்கு இப்போது ஞாபகம் வருகிறது!" என்றான் பார்த்திபேந்திரன்.

"என் உடம்பில் ஒன்றும் காயம் படவில்லை, பார்த்திபா! உள்ளத்தில் என்றும் ஆறாத காயம் பட்டுவிட்டது. வீர பாண்டியன் படுத்துக் கிடந்த கட்டிலுக்கு முன்னால் வந்து அவள் கை கூப்பி என்னிடம் உயிர்ப் பிச்சை கேட்ட காட்சி என் மனதை விட்டு அகலவில்லை. 'ஐயோ! அவள் கேட்டதைக் கொடுக்காமல் போய் விட்டோமே!' என்று என் மனம் பதை பதைத்தது. என் உயிரைக் கொடுப்பதின் மூலம் வீர பாண்டியனை உயிர்ப்பித்து அவளிடம் சேர்க்க முடியுமானால் அப்படியே நான் செய்திருப்பேன். இது முடியாதபடியால் என்னை நானே நொந்து கொண்டேன். என்னை நானே சபித்துக்கொண்டேன். பார்த்திபா! நம்முடைய வல்லமைகளைப் பற்றி நாம் எவ்வளவோ நினைத்துக் கொள்கிறோம். நம்மால் ஆகாத காரியம் ஒன்றுமேயில்லை என்று கருதி இறுமாப்பு அடைகிறோம். 'அரசர்களிடம் மகா விஷ்ணுவின் அம்சம் இருக்கிறது' என்று ஓலைச் சுவடிகளில் எழுதி வைத்திருப்பதைக் கேட்டுவிட்டு, அதைக்கூட உண்மையென்று நம்பி விடுகிறோம். ஆனால், உடலை விட்டுப் பிரிந்துபோன ஆவியைத் திரும்பக் கொண்டு வரும் வல்லமை நமக்கு உண்டா? அரச குலத்தில் பிறந்த யாருக்காவது இருந்திருக்கிறதா? நம்மால் உயிரை வாங்கத்தான் முடியும்; ஆனால் உயிரைக் கொடுக்கும் சக்தி மனிதர்களாய்ப் பிறந்த யாருக்கும் இல்லை!......"

"அப்படி இல்லாமலிருப்பதே மிக நல்லது. அந்த வல்லமை தங்களுக்கு இருந்திருந்தால், எவ்வளவு தவறான காரியம் நடந்துபோயிருக்கும்? பாண்டியனுக்கு மறுபடியும் உயிரைக் கொடுத்திருப்பீர்கள். அவன் மீண்டும் எங்கேயாவது மலைப் பொந்தில் போய் ஒளிந்திருப்பான். பாண்டிய நாட்டு யுத்தம் ஒருவேளை இன்னும் நடந்து கொண்டிருக்கும்! இவ்வளவும் ஒரு பெண்ணின் பொய்க் கண்ணீருக்காக!" என்றான் பார்த்திபேந்திரன்.

"பல்லவா! நீ பெண் குலத்தை வெறுக்கும் துர்ப்பாக்கியசாலி! காதல் என்றால் இன்னதென்று நீ அறிய மாட்டாய்! அதனாலேயே இவ்விதம் பேசுகிறாய்!"

"ஆம்; நான் எந்தப் பெண்ணுடைய கண் வலையிலும் சிக்கியதில்லைதான். ஆனால் தங்கள் அந்தரங்கத்துக்குரிய நண்பன் வந்தியத் தேவன் மஞ்சள் பூசிய முகம் எதைக் கண்டாலும் மயங்கிப் பல்லை இளிப்பவன். ஆகையினாலேயே அவனைத் தங்களுக்கு என்னைக் காட்டிலும் பிடித்திருக்கிறது. இல்லையா, அரசே!"

"ஆகா! கடைசியில் வந்தியத் தேவனிடம் வந்துவிட்டாய் அல்லவா? ஏது, இத்தனை நேரம் அவனை மறந்து விட்டாயே என்று பார்த்தேன்!"

"ஆம், அவனைப் பற்றி உண்மையைச் சொன்னால் தங்களுக்குக் கசப்பாகவே இருக்கும். அந்தப் பேச்சை விட்டு விடுகிறேன். பிறகு என்ன நடந்தது, அரசே! நந்தினியை மறுபடியும் தாங்கள் சந்திக்கவே இல்லையா? வீர பாண்டியனுக்காக உருகினவள் எப்படிக் கிழவர் பழுவேட்டரையரை மணந்தாள் என்று அவளைக் கேட்கவே இல்லையா?"

"வீர பாண்டியனைக் கொன்ற இரவில் வெற்றிக் கோலாகலங்களுக்குப் பிறகு நீங்கள் எல்லாரும் பாசறைகளில் படுத்துத் தூங்கினீர்கள்.



எனக்கோ தூக்கம் வரவேயில்லை. அவனை மறுபடியும் பார்க்க வேண்டும் என்று என் உடம்பிலுள்ள ஒவ்வொரு நரம்பும் துடித்தது. அவனைப் பார்த்து ஏதேனும் சமாதானம் சொல்ல வேண்டும், மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று விரும்பினேன். மற்றொரு சமயம் அவன் பேரில் எனக்குப் பொங்கி எழுந்த கோபத்தைக் கொட்ட வேண்டும் என்று ஆவேசம் உண்டாயிற்று. எப்படியாவது அவனைப் பார்த்தாலொழிய மன நிம்மதி ஏற்படாது, சோழ நாட்டுக்குத் திரும்பிப் போக முடியாது என்று தோன்றியது. ஆகையால், நள்ளிரவில் நீங்கள் யாரும் அறியாமல் பாசறையிலிருந்து புறப்பட்டுக் குதிரை ஏறிச் சென்றேன். வைகை நதியின் நடுவிலிருந்த தீவை அடைந்தேன். மனம் பதைபதைக்க, உடம்பெல்லாம் நடுங்க, கால்கள் தள்ளாட, குதிரையிலிருந்து இறங்கி, மெள்ள மெள்ள நடந்து பெருமான் கோயிலுக்கு அருகில் சென்றேன். அங்கேயிருந்த குடிசைகள் எல்லாம் எரிந்து சாம்பராகிக் கிடப்பதைக் கண்டேன். ஒரு வயோதிகரும் வயோதிக ஸ்திரீயும் எரிந்த குடிசைக்குப் பக்கத்தில் உட்கார்ந்து புலம்பிக் கொண்டிருந்தார்கள். இன்னும் கொஞ்சம் நெருங்கிச் சென்று பார்த்ததில் அவர்கள்தான் முன்னொரு தடவை நந்தினியைப் பழையாறை அரண்மனைத் தோட்டத்துக்கு அழைத்து வந்தவர்கள் என்று தெரிந்தது. என்னைப் பார்த்ததும் அவர்களுடைய துக்கமும் பீதியும் பன்மடங்கு ஆயின. முதலில் அவர்களால் எதுவுமே பேச முடியவில்லை. கொஞ்சம் கொஞ்சமாக அவர்களைத் தைரியப்படுத்தி விசாரித்தேன். ஆற்றுக்கு அக்





கரையில் இருந்த கிராமத்தில் அவர்களுடைய மூத்த குமாரி இருந்தாளாம். அவளுக்குப் பிரசவ காலம் என்று அரிந்து அவளைப் பார்த்து வரப் போயிருந்தார்களாம். நந்தினி அவர்களுடன் வர மறுத்து விட்டாளாம். மனம் போனபடி நடந்து பழக்கமுள்ள அந்தப் பிடிவாதக்காரப் பெண்ணை ஒன்றும் செய்ய முடியாமல் அவர்கள் மட்டும் போய் விட்டுத் திரும்பி வந்தார்களாம். வழியில் யாரோ சில முரடர்கள் ஒரு பெண்ணைக் காலையும் கையையும் கட்டி எரிந்து கொண்டிருந்த சிதையில் பலவந்தமாகப் போட முயன்றதை அவர்கள் பார்த்தார்களாம். யுத்த காலத்தில் இத்தகைய விபரீதங்கள் நடப்பது இயல்பு என்று எண்ணி அவர்களுக்கு அருகில் போகவும் பயந்து கொண்டு விரைவாக இங்கே வந்து சேர்ந்தார்களாம். வந்து பார்த்தால் குடிசைகள் பற்றி எரிந்து கிடந்தனவாம். நந்தினியையும் காணவில்லையாம். இந்த விவரத்தைச் சொல்லி விட்டு அர்ச்சகரும் அவர் மனைவியும், 'இளவரசே! எங்கள் மகள் எங்கே? எங்கள் அருமைக் குமாரி எங்கே?' என்று கதறினார்கள். அவர்கள் நந்தினியின் உண்மைப் பெற்றோர்கள் அல்ல



வென்று எனக்கு முன்னமே தெரிந்திருந்தது. இப்போது அது சர்வ நிச்சயமாயிற்று. உண்மையில் பெற்றவர்களாயிருந்தால் இப்படித் தனியாக விட்டு விட்டுப் போயிருப்பார்களா? ஆகையால் அவர்கள் பேரில் எனக்கு இரக்கமோ அநுதாபமோ உண்டாகவில்லை. நந்தினியின் கதியைப் பற்றிச் சொல்ல முடியாத துக்கம் ஏற்பட்டு நெஞ்சை அடைத்தது. 'உங்கள் மகன் எரிந்த சிதையைத் தேடிப் போய் நீங்களும் எரிந்து செத்துப் போங்கள்!' என்று வயிற்றெரிச்சல் தீர அவர்களைச் சபித்து விட்டுத் திரும்பிப் பொழுது விடிவதற்குள் பாசறைக்கு வந்து சேர்ந்தேன். நீங்கள் எல்லாரும் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தீர்கள். நான் போனது, திரும்பி வந்தது ஒன்றும் உங்களில் யாருக்கும் தெரியாது......”

“ஆம்; இளவரசே! தெரியாதுதான். அதற்குப் பிறகும் இத்தனை காலமாக இதையெல்லாம் தங்கள் மனதிலேயே வைத்துக் கொண்டிருந்ததை நினைத்தால் வியப்பாயிருக்கிறது. சிநேக தர்மத்துக்கு இவ்வளவு மாறாகத் தாங்கள் நடந்து கொள்வீர்கள் என்று நான் கனவிலும் எண்ணவில்லை. தங்களுடைய நிலையில் நான் இருந்திருந்தால் தங்களிடம் சொல்லாமல் இருந்திருக்க மாட்டேன்” என்றான் பார்த்திபன்.

“ஆனால், நீ என்னுடைய நிலையில் இல்லையே, பார்த்திபா! இந்த உலகில் யாருமே என்னுடைய நிலையில் இருந்திருக்க முடியாது. என் நிலையில் இருந்திருந்தால், நீ எப்படி நடந்து கொண்டிருப்பாய் என்று யார் சொல்ல முடியும்?” என்றான் கரிகாலன்.

“அரசே! நடந்துபோனதைப் பற்றி இப்போது நமக்குள் விவாதம் வேண்டாம். அப்புறம் என்ன நடந்தது? நந்தினியைப் பிறகு எப்போது பார்த்தீர்கள்? பழுவூர் இளைய ராணி ஆன பிறகா? அதற்கு முன்னமேயா?”

“அதற்கு முன்னால் நான் பார்த்திருந்தால், அவள் பழுவூர் ராணி ஆகியிருக்க மாட்டாள். பழுவேட்டரையரின் கலியாணம் நடந்தபோது நானும் நீயும் ஊரில் இல்லை. அந்தச் செய்தி வந்தபோது நாம் இருவரும் அருவருப்போடு பேசிக் கொண்டது உனக்கு நினைவில் இருக்குமே? அதற்குச் சில நாளைக்குப் பிறகு எனக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் நடந்தது. அடுத்த பட்டம் யாருக்கு என்பதைப் பற்றிச் சந்தேகம் எதுவும் இருக்கக் கூடாது என்றுதான் என் தந்தையும் பாட்டியும் மற்றப் பெரியோர்களும் சேர்ந்து அந்த ஏற்பாடு செய்தார்கள். மதுராந்தகனுக்கு யாராவது துர்ப்போதனை செய்து தூபம் போட்டு விட்டு விடப் போகிறார்கள் என்ற பயம் அவர்களுக்கு இருந்ததோ என்னமோ? இளவரசுப் பட்டம் கட்டியதோடு, பரகேசரிப் பட்டம் அளித்து, என் பெயராலேயே கல்வெட்டு சாஸனம் ஏற்படுத்தும் உரிமையையும் அளித்தார்கள். 'இனி இச் சோழ சாம்ராஜ்யத்தை ஆளும் பொறுப்பு முழுதும் உனக்கே' என்று என் அருமைத் தந்தை மனதார வாயாரக் கூறினார். அதை நாட்டார், நகரத்தார், அமைச்சர்கள், தளபதிகள் அனைவரும் ஒப்புக் கொண்டு ஜயகோஷம் செய்தார்கள். இந்தக் கோலாகலத்தில் நான் நந்தினியை அடியோடு மறந்திருந்தேன். ஆனால் பட்டாபிஷேகச் சடங்கு நடந்து முடிந்த சிறிது நேரத்துக்கெல்லாம் அவளை நான் என்றும் மறக்கமுடியாத சம்பவம் நேர்ந்தது. பழமையான சோழர் குலத்து மணிமகுடத்துடன் என்னைச் சக்கரவர்த்தி அந்தப்புரத்துக்கு அழைத்துப் போனார். என் அன்னையிடமும் பாட்டியிடமும் மற்ற அந்தப்புர மாதரிடமும் ஆசி பெறுவதற்காக அழைத்துப் போனார். என்னைத் தொடர்ந்து என் சகோதரனும் முதன் மந்திரியும் பழுவேட்டரையர்களும் வந்தார்கள். அந்தப்புரத்தில் வயது மிகுந்த தாய்மார்களோடு, என் தங்கையும் அவளுடைய தோழிகளும் மற்றும் பல இள மங்கையரும் கூட்டமாக நின்றார்கள். எல்லாரும் ஆடை ஆபரணங்களினால் ஜொலித்துக் கொண்டு மகிழ்ச்சியினால் மலர்ந்த முகங்களோடு எங்கள் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டு நின்றார்கள். ஆனால் அத்தனை முகங்களிலும் ஒரே ஒரு முகந்தான் என் கண்ணுக்குத் தெரிந்தது. அது நந்தினியின் முகந்தான். எரிந்து சாம்பராய்ப் போனாள் என்று நான் எண்ணியிருந்த என் இதய தேவதைதான் அவள்! அந்த அரண்மனை அந்தப்புரத்துக்குள்

அவள் எப்படி வந்தாள்? அவ்வளவு பிரமாதமான ஆடை அலங்காரங்களுடன் ராணிகளுக்குள் நடுநாயகமான மகாராணியாக அங்கே எப்படி நிற்கிறாள்? அவள் முகத்தில்தான் என்ன மந்தகாஸம்? அவளுடைய சௌந்தரியம் முன்னைக் காட்டிலும் பத்து மடங்கு அதிகமாகி யிருப்பது எப்படி? சில கண நேரத்திற்குள் என் உள்ளம் பற்பல ஆகாசக் கோட்டைகளைக் கட்டிவிட்டது! சோழ சாம்ராஜ்யத்திற்கு உரியவன் என்று நான் முடி சூட்டிக் கொண்ட அன்றைய தினம் உண்மையிலேயே என் வாழ்நாளில் அதிர்ஷ்ட தினம் ஆகப் போகிறதா? என் உள்ளத்தைக் கவர்ந்த ராணியை என் பட்ட மகிஷியாகவும் அடையப்போகிறேனா? ஏதோ ஓர் அதிசயமான இந்திர ஜாலத்தினால், மந்திர சக்தியினால், அவ்விதம் நடக்கப் போகிறதா?...... இப்படி நான் எண்ணிக் கொண்டிருக்கையில் என் அன்னை வானமாதேவி முன்னால் இரண்டு அடி நடந்து வந்து 'குழந்தாய்!' என்று சொல்லி என்னை ஆசிர்வதித்து உச்சி மோந்தாள்! அதே சமயத்தில் யாரும் எதிர்பாராத அச் சம்பவம் நடந்து விட்டது. என் தந்தை 'ஆ!' என்று ஒரு கூச்சலிட்டு விட்டுத் திடீரென்று தரையில் சுருண்டு விழுந்து மூர்ச்சை அடைந்தார். உடனே, அவ்விடத்தில் பெருங் குழப்பமாகி விட்டது. நானும் மற்ற எல்லாரும் சக்கரவர்த்தியைத் தூக்கி உட்கார வைத்து மூர்ச்சை தெளிவிப்பதில் கவனம் செலுத்தினோம். என் அன்னையையும், பாட்டி செம்பியன் மாதேவியையுந் தவிர மற்ற மாதர் அனைவரும் உள்ளே சென்று விட்டார்கள். தந்தைக்குச் சீக்கிரத்தில் மூர்ச்சை தெளிந்து விட்டது. என் சகோதரி குந்தவையைத் தனி இடத்துக்கு நான் அழைத்துச் சென்று 'நந்தினி அங்கே எப்படி வந்தாள்?' என்று கேட்டேன். நந்தினி பெரிய பழுவேட்டரையரை மணந்து கொண்டு இப்போது பழுவூர் இளைய ராணியாக விளங்குகிறாள் என்று குந்தவை சொன்னாள். என் நெஞ்சில் கூரிய ஈட்டி பாய்ந்தது. நண்பா! போர்க்களங்களில் எத்தனையோ முறை நான் காயம்பட்டதுண்டு. ஆனால், 'நந்தினிதான் பழுவூர் இளையராணி' என்று குந்தவை கூறியதனால் என் நெஞ்சில் ஏற்பட்ட காயம் இன்னும் ஆறவில்லை!" என்று ஆதித்த கரிகாலன் கூறித் தன்னுடைய நெஞ்சை அமுக்கிப் பிடித்துக் கொண்டான். நெஞ்சில் அவனுக்கு இன்னும் வலி இருந்து வந்தது என்பது நன்றாய்த் தெரிந்தது.

## அத்தியாயம் 57

# மாய மோகினி

ஆரம்பத்திலிருந்து அவ்வளவாக அநுதாபம் இல்லாமலே கரிகாலன் கதையைக் கேட்டுக் கொண்டு வந்த பார்த்திபனுக்கும் இப்போது நெஞ்சு உருகி விட்டது. தன்னுடைய கண்களில் துளித்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டான்.

"அரசே! ஒரு பெண்ணின் பேரில் ஏற்பட்ட காதலினால் இப்படிப்பட்ட துன்பம் உண்டாகக் கூடும் என்று நான் கனவிலும் கருதியதில்லை! இளவரசுப் பட்டாபிஷேகம் நடந்த அன்று இப்படி ஓர் அநுபவம் தங்களுக்கு நேர்ந்தது என்று எங்களுக்கெல்லாம் தெரியாது. ஆகையால், தாங்கள் மனச் சோர்வுடன் இருப்பதைப் பார்த்து ஆச்சரியப் பட்டோம். என்ன வெல்லாமோ பரிகாசப் பேச்சுக்கள் பேசித் தங்களைச் சந்தோஷப் படுத்தப் பார்த்தோம். அதெல்லாம் இப்போது எனக்கு நினைவு வருகிறது!" என்றான்.

"ஆம்; நீங்கள் பரிகாசப் பேச்சுப் பேசினீர்கள். என்னை உற்சாகப் படுத்தப் பார்த்தீர்கள். என்னுடைய ஆட்சி காலத்தில் நான் செய்யப் போகும் மகத்தான காரியங்களைப் பற்றிப் பேசினீர்கள். இலங்கையிலிருந்து இமயம் வரையில் சோழ சாம்ராஜ்யத்தை அன்றைய தினமே விஸ்தரித்து விட்டீர்கள்! இன்னும், கடல் கடந்து சென்றும் இராஜ்யங்களைக் கைப்பற்றினீர்கள். அந்தப் பேச்செல்லாம் எனக்கு இன்னும் ஞாபகம்

இருக்கிறது. அவ்வளவும் எனக்கு எவ்வளவு துன்பமளித்தது என்பதும் நினைவிருக்கிறது. பிறகு ஒரு நாள் என்னை நந்தினி பழுவூர் அரண்மனைக்குக் கூப்பிட்டு அனுப்பினாள். போகலாமா, வேண்டாமா என்று என் மனதில் ஒரு போராட்டம் எழுந்தது. கடைசியில், போவதென்று முடிவு செய்தேன். பல விஷயங்களில் எனக்குத் தோன்றியிருந்த ஐயங்களை அவளைக் கேட்டுத் தெரிந்துகொள்ள விரும்பினேன். அவளுடைய பிறப்பின் உண்மையைத் தெரிந்து கொள்ள விரும்பினேன். அந்தப்புரத்தில் என் தந்தை அன்று மூர்ச்சை அடைந்து விழுந்ததற்கும் அங்கே நந்தினியை அவர் அகஸ்மாத்தாகக் கண்டதற்கும் ஏதேனும் சம்பந்தம் இருக்குமோ என்ற சந்தேகங்கூட என் மனதில் தோன்றியிருந்தது. அன்றைய தினம் சக்கரவர்த்திக்கு விரைவில் மூர்ச்சை தெளிந்துவிட்டதாயினும் மறுபடி அவர் பழைய ஆரோக்கியத்தை அடையவேயில்லை என்பது உனக்கு நினைவிருக்கும். நந்தினியுடன் பேசுவதிலிருந்து எனக்கு அதுவரை விளங்காத மர்மம் ஏதேனும் வெளியாகலாம் என்று எண்ணினேன். இதையெல்லாம் ஒரு வியாஜமாக வைத்துக் கொண்டேனே தவிர, உண்மையில் நான் சென்ற காரணம், அவளிடமிருந்த காந்த சக்திதான். வேறு காரணங்களைக் கற்பித்து என்னை நானே ஏமாற்றிக் கொண்டு சென்றேன். பழுவேட்டரையர் ஊரில் இல்லை. அவருடைய அரண்மனையில் என்னைத் தடுப்பாரும் இல்லை; எனக்கும் நந்தினிக்கும் ஏற்பட்டிருந்த பழைய சிநேகத்தைப் பற்றி அங்கே அறிந்தவர்களும் இல்லை. இளவரசுப் பட்டம் கட்டிக் கொண்ட ராஜகுமாரன் பழுவூர் அரண்மனை ராணிமார்களிடம் ஆசி பெறுவதற்காக வருவதாகவே நினைத்தார்கள். அரண்மனைத் தோட்டத்தில் உள்ள லதா மண்டபத்தில் நந்தினியை நான் சந்தித்தேன். பார்த்திபா! கடற் பிரயாணம் செய்வோரின் அநுபவங்களை நீ கேட்டிருக்கிறாய் அல்லவா? சமுத்திரத்தில் சில இடங்களில் அளவில்லாத சக்தியுடனும் வேகத்துடனும் கூடிய நீரோட்டங்கள் இருக்குமாம்.






அந்த நீரோட்டங்களில் கப்பல்கள் அகப்பட்டுக் கொண்டால் சிறிது நேரத்தில் சுக்குச் சுக்காகப் போய் விடுமாம். நந்தினியின் முன்னிலையில் நான் இருந்தபோது, கடல் நீரோட்டத்தில் அகப்பட்டுக் கொண்ட கப்பலின் கதியை அடைந்தேன். என் உடல், உள்ளம், இருதயம்,—எல்லாம் ஆயிரம் சுக்கல்களாகி விட்டன. என்னுடைய நாவிலே வந்த வார்த்தைகள் எனக்கே வியப்பை அளித்தன. 'ஐயோ! இது என்ன இப்படிப் பேசுகிறோம்?' என்று நெஞ்சில் ஒரு பக்கம் தோன்றிக் கொண்டிருந்தபோது, வாய் ஏதேதோ உளறிக் கொண்டிருந்தது. எனக்கு இளவரசுப் பட்டம் சூட்டியதைப் பற்றி நந்தினி தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தாள்.

'எனக்கு அதில் ஒன்றும் மகிழ்ச்சி இல்லை!' என்றேன்.

'ஏன்?' என்று கேட்டாள்.

'இது என்ன கேள்வி கேட்கிறாய்? எனக்கு இவ்வாறு மகிழ்ச்சி இருக்கும்? நீதான் எப்படி அநியாயம் செய்து விட்டாயே?' என்றேன். நான் சொல்வது அவளுக்கு விளங்காதது போல நடித்தாள். இவ்விதம் பேச்சு வளர்ந்துகொண்டே போயிற்று. என் அன்பை நிராகரித்தது பற்றியும், வீர பாண்டியனைக் காதலித்தது பற்றியும் அவள் மீது நான் குற்றம் சாட்டினேன். கிழவர் பழுவேட்டரையரை மணந்தது பற்றியும் குத்தலாகப் பேசினேன்.

'இளவரசே! முதலில் தாங்கள் என் காதலைக் கொன்றீர்கள்; பிறகு என்னைக் காதலித்தவனை என் கண் முன்னால் கொன்றீர்கள்; என்னையும் கொன்றாலொழியத் தங்கள் மனம் திருப்தி யடையாது போலிருக்கிறது. நான் உயிரோடிருப்பதே தங்களுக்குப் பிடிக்கவில்லை. நல்லது; என்னையும் கொன்று தங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்துகொள்ளுங்கள்!' என்று சொல்லித் தன்னுடைய இடுப்பில் செருகியிருந்த சிறிய கத்தியை எடுத்து நீட்டினாள்.

'நான் ஏன் உன்னைக் கொல்கிறேன்? நீயல்லவா என்னை உயிரோடு வதைத்துக்கொண்டிருக்கிறாய்!' என்றேன்.

கடைசியில், இப்போது நினைத்துப் பார்த்தாலும் வெட்கம் தருகிற வார்த்



தைகளை என் வாய் சொல்லிற்று. 'இன்னமுங்கூட மோசம் ஒன்றும் நேர்ந்துவிடவில்லை. நீ ஒரு வார்த்தை சொல்லு! இந்தக் கிழவனை விட்டு விட்டு வந்து விடுவதாகச் சொல்லு! உனக்காக நான் இந்த ராஜ்யத்தை விட்டு வந்து விடுகிறேன். இருவரும் கப்பல் ஏறிக் கடல்கடந்து தூர தேசத்துக்குப் போய் விடுவோம்!' என்றேன்.

நந்தினி அதைக் கேட்டுப் பயங்கர மாகச் சிரித்தாள். அதை நினைத்தால் இப்போதுகூட எனக்கு ரோமம் சிலிர்க்கிறது. 'கடல் கடந்து தூர தேசத்துக்குப் போய் நாம் என்ன செய்வது என்கிறீர்கள்? விறகு வெட்டிப் பிழைக்கவா? அல்லது வாழைத் தோட்டம் போட்டுப் பிழைக்கவா?' என்றாள். 'அதெல்லாம் உனக்குப் பிடிக்காது தான்! அர்ச்சகர் வீட்டில் வளர்ந்தவள் பழுவூர் ராணி ஆகிவிட்டாய் அல்லவா?' என்றேன்.

'இதோடு திருப்தி யடைவதாக எண்ணம் இல்லை. சோழ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் சக்கரவர்த்தினியாக வீற்றிருப்பதாக உத்தேசம். தங்களுக்கு இஷ்டமிருந்தால் சொல்லுங்கள். பழுவேட்டரையர் இருவரையும் கொன்று விட்டு, சுந்தர சோழரைச் சிறையில் அடைத்து விட்டு, சக்கரவர்த்தியாகி என்னைத் தங்கள் பட்ட மகிஷியாக்கிக் கொள்கிறதா யிருந்தால் சொல்லுங்கள்!' என்றாள். 'ஐயோ! என்ன பயங்கரமான வார்த்தைகளைச் சொல்கிறாய்?' என்றேன். 'காயமடைந்து படுத்துக் கிடந்த பாண்டியனை என் கண் முன்னால் கொன்றது பயங்கரமான காரியமில்லையா?' என்று நந்தினி கேட்டாள். இதனால் என் குரோதம் கொழுந்து விடத் தொடங்கியது. ஏதேதோ வெறி கொண்ட வார்த்தைகளை உளறி அவளை நிந்தித்து விட்டுக் கிளம்பினேன். அப்போதும் அவள் என்னை விடவில்லை. 'இளவரசே! எப்போதாவது தங்களுடைய மனதை மாற்றிக் கொண்டால் என்னிடம் திரும்பி வாருங்கள். என்னைச் சக்கரவர்த்தினியாக்கிக் கொள்ளத் தங்கள் மனம் இடம் கொடுக்கும் போது வாருங்கள்!' என்றாள். அன்று அவளை விட்டுப் பிரிந்தவன் பிறகு அவளைப் பார்க்கவே இல்லை!" என்றான் ஆதித்த கரிகாலன்.

இதையெல்லாம் கேட்டுப் பயங்கரமும் திகைப்பும் அடைந்த பார்த்திபேந்திரன், "அரசே! இப்படியும் ஒரு ராட்சஸி உலகில் இருக்க முடியுமா? அவளைத் தாங்கள் மறுபடி சந்திக்காததே நல்லதாய்ப் போயிற்று!" என்று கூறிப் பெருமூச்சு விட்டான்.

"அவளை நான் போய்ப் பார்க்கவில்லை என்பது சரிதான்! ஆனால் அவள் என்னை விட்ட பாடில்லை. பல்லவா! இரவும் பகலும் என்னைச் சுற்றிச் சுற்றி வந்து என்னை வதைக்கிறாள். பகலில் நினைவிலே வருகிறாள். இரவில் கனவிலே வருகிறாள். ஒரு சமயம் முகத்தில் மோகனப் புன்னகையுடன் என்னைக் கட்டி அணைத்து முத்தம் கொடுக்க வருகிறாள். இன்னொரு சமயம் கையில் கூரிய கத்தியுடன் என்னைக் குத்திக் கொல்ல வருகிறாள். ஒரு சமயம் கண்களில் கண்ணீர் பெருக்கி விம்மிக் கொண்டு வருகிறாள். வேறொரு சமயம் தலைவிரி கோலமாய்க் கன்னங்களைக் கை விரல்களினால் பிறாண்டிக் கொண்டும் அலறி அழுது கொண்டும் வருகிறாள். ஒரு சமயம் பைத்தியம் பிடித்தவளைப் போல் பயங்கரமாய்ச் சிரித்துக் கொண்டு வருகிறாள். இன்னொரு சமயம் அமைதியான முகத்துடன் ஆறுதல் சொல்ல வருகிறாள். கடவுளே! அந்தப் பாதகி என்னை எப்படித்தான் வதைக்கிறாள் என்று சொல்லி முடியாது. இன்று மாலை பாட்டன் கூறியது நினைவிருக்கிறதா!

நான் ஏன் தஞ்சை போகக் கூடாது என்பதற்கு ஏதேதோ காரணம் கூறினார். உண்மையில் நான் தஞ்சை போகாமலிருப்பதற்கும் என் தந்தையைக் காஞ்சிக்கு வரவழைக்க விரும்புவதற்கும் காரணம் நந்தினிதான்..."

"அரசே! கேவலம் ஒரு பெண்ணுக்குப் பயந்து கொண்டா தஞ்சைக்குப் போகாமலிருக்கிறீர்கள்? அப்படி அவன் என்ன தான் செய்து விடுவான்? வஞ்சனையாக விஷம் வைத்துத் தங்களைக் கொன்று விடுவான் என்று அஞ்சுகிறீர்களா?......'

"இல்லை, பார்த்திபா, இல்லை! இன்னமும் என்னை நீ நன்றாகப் புரிந்து கொள்ளவில்லை. அவன் என்னைக் கொன்று விடுவான் என்பதற்காக நான் அஞ்சவில்லை. அவளுடைய இஷ்டப்படி என்னைச் செய்ய வைத்து விடுவாளோ என்றுதான் பயப்படுகிறேன். 'உன் தந்தையைச் சிறையில் போடு!' 'உன் தங்கையை நாட்டை விட்டுத் துரத்து!' 'இந்தக் கிழவனைக் கொன்று என்னைச் சிம்மாசனத்தில் ஏற்று!' என்று அந்த மாய மோகினி மறுமுறை சொன்னால், எனக்கு அப்படியெல்லாம் செய்யத் தோன்றி விடுமோ என்று பயப்படுகிறேன். நண்பா! ஒன்று நந்தினி சாக வேண்டும்; அல்லது நான் சாக வேண்டும்; அல்லது இரண்டு பேரும் சாக வேண்டும். இல்லாவிடில் இந்த ஜன்மத்தில் எனக்கு மன அமைதி கிடையாது!" என்றான் கரிகாலன்.

"அரசே! இது என்ன பேச்சு? தாங்கள் ஏன் சாக வேண்டும்? எனக்கு அனுமதி கொடுங்கள்! இலங்கைக்கு அப்புறம் போகிறேன். உடனே தஞ்சாவூர் சென்று அவளைக் கொன்று விட்டு வருகிறேன். ஸ்திரீஹத்தி தோஷம் எனக்கு வந்தால் வரட்டும்......"

"அப்படி ஏதாவது செய்தால் உன்னை என் பரம வைரியாகக் கருதுவேன். நந்தினியைக் கொல்லத்தான் வேண்டுமென்றால், என்னுடைய இந்தக் கையினாலேயே அவளைக் கொல்லுவேன். கொன்று விட்டு என்னையும் கொன்று கொண்டு மாளுவேன்! வேறொருவர் அவளுடைய சுண்டு விரலின் நகத்துக்குக் கேடு செய்வதையும் என்னால் பொறுக்க முடியாது! நண்பா! நீ நந்தினியை மறந்து விடு! அவளைப் பற்றி நான் சொன்னதெல்லாவற்றையும் மறந்து விடு! பாட்டன் சொன்னபடி நீ நாளைக்கே புறப்பட்டு இலங்கைக்குப் போ! என் சகோதரன் அருள்மொழியை எப்படியாவது வற்புறுத்தி இங்கே அழைத்து வா! அவனை இங்கே இருக்கச் செய்வோம். பாட்டனும் பேரனும் யோசித்து என்ன வேணுமோ செய்து கொள்ளட்டும். நாம் இலங்கைக்குச் செல்வோம். மீண்டும் கப்பல் ஏறிப் பெரும் படையுடன் கீழைக் கடல்களில் செல்வோம். சாவகம், புஷ்பகம், கடாரம் முதலிய தேசங்களுக்குச் சென்று வெற்றிக் கொடி நாட்டுவோம். பிறகு மேற்கே திரும்புவோம். அரபு, பாரஸீகம், மிசிரம் முதலிய நாடுகளுக்குச் சென்று அங்கெல்லாம் தமிழர் வீரத்தையும் புலிக் கொடியையும் நிலை நாட்டுவோம். பார்த்திபா! அந்த நாடுகளில் எல்லாம் கற்பு என்னும் கட்டுப்பாடு இந்த நாட்டில் உள்ளது போல் கிடையாது என்பது உனக்குத் தெரியுமா? அரசர்கள் தங்கள் இஷ்டம்போல் அவர்களுடைய ஆட்சியின் கீழ் உள்ள எந்தப் பெண்ணையும் அழைத்துச் சென்று அந்தப்புரத்தில் சேர்த்துக் கொள்வார்களாம்!..." என்றான் கரிகாலன்.

பார்த்திபன் இதற்கு மறுமொழி சொல்லுவதற்குள் திருக்கோவலூர் மலையமான் அங்கு வந்து சேர்ந்தார். "அரவான் கதையைப் போல் அற்புதமான கதை இந்த உலகத்திலேயே கிடையாது. நீ இப்போது சொல்லிக் கொண்டிருந்த எந்த நாட்டிலும் கிடையாது. ஆனால் இன்னுமா நீங்கள் தூங்காமல் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்? பார்த்திபேந்திரா! நாளைக்கு இலங்கைக்குப் புறப்பட வேண்டும் என்பது உனக்கு நினைவிருக்கிறதல்லவா?" என்றார்.

"அதைப் பற்றித்தான் தூங்காமல் பேசிக் கொண்டிருக்கிறோம்!" என்றான் பார்த்திபேந்திரன்.

"பொன்னியின் செல்வன்" முதல் பாகம் முற்றிற்று

**அடுத்த இதழில் இரண்டாம் பாகம் ஆரம்பமாகிறது**

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 34. சர்வாங்காசனம்

இந்த ஆசனத்தைச் செய்யும் விதம்: படுக்கையில் மல்லாந்து படுக்கவும். பின் இரண்டு கால்களை நேராய்த் தூக்கவும். இரண்டு கைகளையும் மடக்கி, முழங்கைகளை ஊன்றி, மூச்சுப் பிடித்து, கால்களையும், புருஷ்டத்தையும், இடுப்பையும் சேர்ந்தாற்போல் தலைப்பக்கம் தூக்கிச் சாய்க்கவும். கை கால்களால் படத்திலுள்ளது போல் இடுப்புக்குக் கீழே பிடித்து உடலை நேராய் நிமிர்த்திக் கொள்ளவும். தலையை முன்னுக்குச் சாய்த்து முகவாய்க்கட்டையை மார்பில் அழுந்தும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். கால்களைத் தூக்கி, கைகளால் முதுகைப் பிடித்துக் கொண்டபின் மூச்சை சாதாரணமாய் விடவும் வாங்கவும் செய்யலாம். முதுகு கால்கள் நேராய் இருக்க வேண்டும். கால்களை விரைப்பாய் வைத்துக்கொள்ளக் கூடாது. மிக தளர்த்தியாயும் தொய்யவும் விட்டு விடக்கூடாது. வாய் மூடி யிருக்க வேண்டும். இதைத்தான் சர்வாங்காசனம் என்பது.

கால்களை விரைப்பாய் வைத்துக் கொண்டால் இரத்தம் அந்த இடங்களுக்கு அதிகமாகச் செல்லவேண்டி யிருக்கும். மனமும் அதிலேயே ஈடுபடும். இந்த சர்வாங்காசனத்தில் ரத்தமும், மனமும் தைராய்டிலும், நெஞ்சிலும் ஈடுபட வேண்டுமாதலால், அநாவசியமான இடங்களில் ஈடுபடுத்தக் கூடாது. கால்களைத் தொய்ய விட்டால் அதிக நேரம் நிற்க முடியாது. ஆசன நிலைமையும் சரியாய் வராது. பிறகு கீழே இறக்கும்போது, இடுப்பின் அடியில் தாங்கும் கைகளைத் தளர்த்தி, கைகளின் மேலேயே உடலை நழுவவிட்டுக் கொண்டு வந்து கால்களைப் பூமியின்மேல் அமர்த்தி கைகளைப் பக்கங்களில் அமர்த்தி இளைப்பாறவும். திடீரென்று கால்களைப் பொத்தென்று தரையில் போடக் கூடாது.

இது சிலருக்குச் சுலபமாய்ச் செய்ய வரும். மற்ற பயிற்சிகளைச் செய்து உடலைத் தன் அடக்கத்தில் வைத்திருப்பவர்களுக்குச் சுலபமாய் வரும். தேகப் பயிற்சியை அசட்டை செய்து உடலை வாளா விட்டவர்களுக்குச் சற்று கஷ்டமாய்த் தோன்றும். அநேகருக்கு இரண்டு கால்கள் மட்டும்தான் தூக்க வரும். புருஷ்டத்தையும் இடுப்பையும் சேர்ந்தாற்போல் தூக்கவே முடியாது. என்னதான் கைகளையும் முழங்கைகளையும் ஊன்றினாலும் இடுப்புக்குக் கீழ் உள்ள பாகம் மேலே எழும்பாது. 'சரி. நமக்கு இது செய்ய வருவதேது! எல்லாம் சிறு வயது முதற்கொண்டு செய்திருக்க வேண்டும். நமக்காவது, சர்வாங்காசனம் செய்ய வருவதாவது!' என்று மிகச் சுலபமாய் விட்டுவிடவே பார்ப்பார்கள்

மனது வைத்தால் ஆகாத காரியம் கிடையாது. இத்தனை நாள் வணங்காமல் இருந்த உடல் வளையாதுதான். தினமும் விடாமல் சிறிது சிறிதாக முயற்சி எடுத்துப் பயின்று வரவேண்டும். கால்களை மேலே எழுப்புகிறோமல்லவா? முடிந்த மட்டும் பின்னுக்குப் போகும்படி தூக்கி, கீழே கால்களை இறக்கி, பூமிக்கு இடிக்காமல் அப்படியே மறுபடி தூக்க வேண்டும். ஹலாசனத்தைச் செய்ய வராதவர்களுக்கு இம்மாதிரியே தூக்கித் தூக்கிப் பழக வேண்டுமென்று சொல்லியிருக்கிறேன். அதே போல் செய்து வந்தால் சில நாட்களில் செய்ய வந்துவிடும். ஹலாசனத்தைச் செய்ய முடிந்தவர்களுக்குச் சர்வாங்காசனம் மிகச் சுலபமாய் வரும். ஹலாசனத்தில் கால்கள் பின்பக்கம் போய்த் தொடவேண்டும். சர்வாங்காசனத்தில் கால்களைத் தலைக்கு நேராய்க்கொண்டு நிறுத்தினால் போதும். எவ்வளவு தூரம் இடுப்பின் கீழ் கைகளால் பிடித்துக் கொள்ளுகிறோமோ, அவ்வளவுக்கும் நம்முடைய முதுகும் நேராய் நிமிரும். கால்களும் நேராய் வரும்.

சிலருக்கு எடுத்ததும் படத்திலுள்ள படி வராதுதான். அதிலும் அதிக வயதாகிச் செய்பவர்களுக்கு ஆசனங்கள் எல்லாம் மிகச் சரியாய் வரும் என்று எதிர்பார்க்க முடியாது. சற்று ஏறத்தாழ இருந்தாலும், பலன் என்னமோ ஒன்றுதான். ஒவ்வொரு ஆசனமும் செய்ய முயற்சி எடுத்துக் கொண்டாலே, நாம் எதிர்பார்த்த பலனை அடையும் போது சரியான நிலை வந்த பிறகுதான் பலன் கிடைக்குமென்பதில்லை. பிறருடைய மெச்சுதலும், சபாஷ் பட்டமும் வேண்டியதில்லை. அது சரியில்லை, இது சரியில்லை என்ற வாதங்கள் வேண்டாம். நமக்கு வேண்டுவதெல்லாம் குணம்தான். இதில் கவனிக்க வேண்டியதெல்லாம் முகவாய்க் கட்டை மார்பில் இடித்து இருக்கின்றதா? முதுகு நேராக இருக்கிறதா? என்பது தான். இதற்கென்று வாயைத் திறந்து முகவாய்க்கட்டையை மார்பில் இடிக்கச் செய்யக் கூடாது. வாய் மூடி யிருக்க

வேண்டும். முதுகை இன்னும் வளைத்துத்தான் முகவாய்க் கட்டையை மார்பில் இடிக்கச் செய்ய வேண்டும்.

கால்கள் இரண்டும் தலைக்கு நேராய் இருக்க வேண்டுமென்பது முறையானாலும் அதிக நேரம் செய்பவர்கள் சற்று தலைக்குப் பின்புறம் சாய்த்துக் கொண்டாலும் பரவாயில்லை. அதற்கென்று அதிகமாய்ச் சாய்த்து விடக்கூடாது. ஏதோ மூன்று அங்குலம் நான்கு அங்குலம் வரை தள்ளி வைத்துக் கொள்ளலாம். அப்பொழுதுதான் கை வலிக்காது. அதிக நேரம் நிற்கவும் வரும்.

சிலருக்கு முதுகெலும்பு வளைக்க வராததினால், கால்களை நேராய் நிமிர்த்தவராது. சிலருக்குக் கால்கள் பின் பக்கம் இருந்தால்தான் செய்ய வரும். அதனால் பாதகமில்லை. ஆனால் நாளாவட்டத்தில் நிமிர்த்திக் கொள்ளலாம். ஆரம்பத்தில் எல்லோருக்கும் முழங்கை உறுத்தும்; எரிச்சலும் எடுக்க ஆரம்பிக்கும். பழகி வந்தால் காய்த்துச் சரியாய் விடும். அதிக நேரம் செய்தால் கழுத்தின் பின்னாலும் காய்ப்பு ஏற்படும்.

இந்த ஆசனத்தைச் சாதாரணமாய் ஆரம்ப சாதகர்கள் பத்து நிமிஷங்கள் அப்படியே நின்று செய்தால் போதும். பிறகு நேரத்தைச் சிறிது சிறிதாக அதிகமாக்கிக் கொள்ளலாம். ஆறு மாதத்தில் அரை மணி நேரம் வரை செய்யப் பழகிக் கொள்ளலாம். அதற்கு மேல் செய்ய வேண்டுமென்பதில்லை. ஆனால் பத்து நிமிஷங்களுக்குக் குறைக்கக் கூடாது. அவரவர்கள் சௌகரியத்துக்கும் பிரியத்திற்கும் தக்கபடி 15, 20 நிமிஷங்கள் செய்யலாம்.

ஆனால் ஆரம்ப சாதகர்களுக்குப் பத்து நிமிஷங்களுக்கும் அப்படியே நிற்க வராது. முதலில் ஒரு நிமிஷம் நிற்கலாம். இம்மாதிரி ஆறு தடவைகள் செய்த பிறகு சில விநாடிகள் ஓய்வு எடுத்துப் பிறகு செய்யலாம். (தொடரும்)





# வருஷப்பிறப்பு

வேங்கடலட்சுமி

'பொழுது விடிந்தால் வருஷப் பிறப்பு. இதுவரை எத்தனையோ வருஷப் பிறப்புக்கள் வந்து போய்விட்டன. ஒன்றைப் போல்தான் இன்னொன்றிருக்கிறது. என்னைப் பொறுத்தவரையில் ஒரு வருஷப் பிறப்புக்கும் இன்னொரு வருஷப் பிறப்புக்கும் ஒரு வித்தியாசத்தையும் காணோம்!' — என்று எண்ணியபடியே நிமிர்ந்து கடிகாரத்தைப் பார்த்தாள் தேவகி. மணி ஒன்பதடித்து ஐந்து நிமிஷம் ஆகியிருந்தது. 'இவ்வளவு நாழிகைக்கு மேல் புஸ்தகம் வாங்க யார் வரப் போகிறார்கள்? — இனிமேல் கடையை மூடிக்கொண்டு சாப்பிடப் போகலாம்!' என்று வாய்க்குள் சொல்லிக் கொண்டே கதவைச் சாத்தித் தாளிட்டாள்.

அறையின் நடுவே எரிந்து கொண்டிருந்த பெரிய விளக்கை அணைத்து விட்டுத் தாழ்வாரத்தைத் தாண்டிக் கூடத்தையடைந்தாள் தேவகி. கூடத்தின் ஒரு ஓரமாகக் கிடந்த மரக் கட்டிலின் மீது நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள், அவள் தங்கை பார்க்கவி. கூடத்தில் இருந்த குத்து விளக்கின் மங்கலான வெளிச்சத்தில் அவளுடைய அழகிய முகம் பால்போலக் களங்கமற்று விளங்கியது. மலையாளத்துப் பெண்களுக்கே உரிய அடர்ந்து கருண்டு அலைபோல் நெளிந்த அவளுடைய கரிய கூந்தல் தலையணையின் மீது விரிந்து கிடந்தது. அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்த அவளுடைய உருவம் தேவகியின் மனத்தில் பல விதமான சிந்தனைச் சாயல்களைக் கிளப்பிவிட்டது. ஒரு பெரு மூச்சு விட்டபடியே கலைந்து கிடந்த போர்வையை எடுத்து அவள்மீது போர்த்தி விட்டுச் சமையலறைக்குள் நுழைந்தாள். மூலையில் அணையும் தறுவாயிலிருந்த குத்து விளக்கைத் தூண்டிவிட்டுத் தட்டுக்கு அருகில் சாப்பிட உட்கார்ந்து கொண்டாள்.

இன்னது சாப்பிடுகிறோமென்ற உணர்ச்சியில்லாமலே ஏதோ சிந்தித்த வண்ணம் சாப்பிட்டு விட்டுக் கூடத்துக்கு வந்தாள். சுவரில் மாட்டியிருந்த நிலைக் கண்ணாடியையெடுத்துத் துடைத்துக் கீழே வைத்தாள். ஒரு தாம்பாளத்தில் புது நெல்லைப் பரப்பி வைத்துப் பக்கத்தில் ஒரு தட்டில் வெற்றிலை, பாக்கு, பூ, பழம் எல்லாம் எடுத்து வைத்தாள். மீண்டும் உள்ளே போய் ஒரு பெரிய பலாப் பழத்தைச் சிரமப்பட்டுத் தூக்கிக்கொண்டு வந்து அதையும் அங்கே வைத்தாள். எல்லாவற்றையும் மற்றும் ஒரு முறை திருப்தியோடு பார்த்தாள். மறுதினம், வருஷப் பிறப்பு. அன்று கண்விழித்தெழுந்ததும் அவற்றைப் பார்க்க வேண்டும். அப்பொழுதுதான், பிறக்கும் புது வருஷம் முழுவதிலும் வீட்டில் தனதான்ய சம்பத்துக்கள் கொழிக்குமென்பது மலையாளத்தில் வழங்கும் ஐதீகம். அதன்படிதான் அவள் அந்தச் சாமான்களையெடுத்து வைத்தாள். மீண்டும் கதவுகளெல்லாம் சரியாகச் சாத்தப் பட்டிருக்கின்றனவா என்று பார்த்து விட்டுக் கூடத்தின் இன்னொரு ஓரத்திலே கிடந்த கயிற்றுக் கட்டிலின் மீது தன்னுடைய படுக்கையை விரித்துப் போட்டுப் படுத்துக் கொண்டாள் தேவகி.

2

கொஞ்சத்தில் தூக்கம் வந்தால் தானே? மனத்தை மூடியில்லாத பாரம் அழுத்தும் பொழுது தூக்கம் எங்கிருந்து வரும்? புரண்டு புரண்டு படுத்துக்

கொண்டாள். கண் இமைகள் மிளகாய் தடவியதைப் போல் எரிந்தன. இறுக மூடிக்கொண்டாள்; ஒன்றும் பலனில்லை. பக்கத்துக் கட்டிலின் மீது நிம்மதியாக உறங்கிய பார்க்கவியின் நிதானமான சுவாசம் தேவகியின் மனதில் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத கோடானு கோடி எண்ணங்களைக் கிளறி விட்டது. பங்குனி மாதத்துக் கடைசி இரவின் பொறுக்க முடியாத புழுக்கம் வேறு. ஆகவே சட்டென்று தேவகி எழுந்து முற்றத்துப் பக்கம் வந்து சுவரில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள்.

'ஐயோ! ஈசுவரா! இந்த எண்ணங்களினின்றும் விடுதலையே கிடையாதா?' என்று ஏங்கியது அவள் மனம்.

* * *

பாலக்காட்டில் பழைய கல்பாத்தியின் கோடியில் ஒரு சிறிய புஸ்தகக் கடை வைத்திருந்தான் குஞ்சன் நாயர். எல்லாம் மலையாளப் புத்தகங்கள். அரிச்சுவடி, பாடபுத்தகங்கள், பாட்டு, தோத்திரப் புத்தகங்கள், பஞ்சாங்கம் எல்லாம் அவனிடம் உண்டு. வீட்டுச் செலவு போகப் பாங்கியிலும் கொஞ்சம் பணம் போடும் அளவுக்கு வரும்படி கிடைக்கும். ஆனால் அவனுடைய மனைவி, இரண்டு குழந்தைகளைப் பெற்றுத் தந்து விட்டு, இளவயதிலேயே இறந்து விட்டாள். குழந்தைகளில் தேவகிதான் மூத்தவள்; பார்க்கவி இளையவள். குஞ்சன் நாயரின் ஒழுத் தாயான பொன்னம்மை வீட்டைக் கவனித்துக் கொண்டிருந்தாள். அதிகமான தொல்லைகளில்லாமல் நாயரின் சம்சாரச் சகடம் சாந்தமாய் உருண்டது.

பெண்களில் தேவகி அதிக அழகியென்று சொல்ல முடியாது. சிவந்து உயர்ந்த உருவம்; தலையில் அலையலையாய்ப் படிந்த கூந்தல். இவ்வளவுதான் அவளைப் பற்றிக் கூறலாம். அதிகம் பேச மாட்டாள். அவளையும் பார்க்கவியையும் சேர்ந்து பார்ப்பவர்களுக்கு இளையவள் தான் கண்கட்டழகியாகத் தோற்றமளித்தாள். பார்க்கவியின் பெரிய விழிகளும் சிரிப்புத் தவழும் அதரங்களும், சங்கோசமில்லாமல் கலகலவென்று பேசும் பாணியும் யாவரையும் வசீகரித்தன. இதைத் தேவகியும் நன்றாக அறிந்திருந்தாள். அறிந்து என்ன பயன்? இயற்கைச் சிருஷ்டியை எப்படி மாற்ற முடியும்?— தங்கையைக் காட்டிலும் அழகிலும் கவர்ச்சியிலும் தான் குறைவானவள் என்று அவளுக்குத் தெரிந்தது முதல் ஏற்கெனவே கூட்டுக்குள்ளேயே சுருட்டிக் கொள்ளும் நத்தையைப் போன்ற அவளுடைய குணம் பின்னும் அடக்கமாகி விட்டது. தனக்குள்ளேயே ஓரேயடியாய் ஐக்கியமாகி விட்டாள். சில சமயம் தகப்பனுக்கு ஒத்தாசையாகக் கடையில் உட்காருவாள். அப்பொழுது வியாபாரம் சாதாரணமாயிருக்கும். ஆனால் அதே இடத்தில் பார்க்கவி வந்து உட்கார்ந்து விட்டால்,—அரை மணி நேரத்துக்குள்ளாக நோட்டுப் புத்தகம், பாடபுத்தகம், அது இதென்று பத்து ரூபாய் வியாபாரம் நடந்துவிடும். இக்காரணம் பற்றிக் குஞ்சன் நாயர் கடையில் தனக்கு ஒத்தாசையாக இருக்கச் சின்னப் பெண்ணைத்தான் கூப்பிடுவான்; தேவகி தன்னுடைய பாட்டிக்கு ஒத்தாசையாக வீட்டிலிருந்து விடுவாள்.

வெளிப் பார்வைக்கு அடக்கமும் சாந்தமுமே உருவாயிருந்த போதிலும் அப்பேதைப் பெண் தேவகியின் மனதில் ஓய்வும் ஒழிச்சலுமில்லாத புயலொன்று கொந்தளித்துக் கொண்டிருந்தது. வாழ்க்கையே வெறுத்துப் போன நிலையில் ஓட்டிக் கொண்டிருந்த ஒவ்வொரு நாளும் ஆமை வேகத்தில் நகர்ந்து போவதாகத் தோன்றியது அவளுக்கு. இந்த நிலையில் தான் நாலைந்து வருஷப் பிறப்புக்கள் வந்து போய் விட்டன. போன வருஷப் பிறப்பன்று,—அதை அவள் ஒரு நாளும் மறக்கவே மாட்டாள்,—ஏனெனில் அன்று தான் அவளுடைய இருதயத்தின் ஓரே ஒரு மூலையிலிருந்த ஆசையின் துளிரும் கருகிச் சாம்பலாயிற்று.

அன்று மத்தியானச் சாப்பாட்டுக்கு வரும்பொழுது தன்னுடன் ஒரு வாலிபனையும் அழைத்து வந்தான் குஞ்சன் நாயர். அன்று பண்டிகையை யொட்டி வீட்டில் நேர்த்தியான சமையல். அவியல், மோர்க் குழம்பு, வெல்லம் போட்டு அவித்த நேந்திரப்பழம், 'பலாப் பழப் பிரதமன்' என்று பல வியஞ்சனங்கள் ஏராளமாகச் செய்திருந்தாள் தேவகி. வாலிபனுடன் குஞ்சன் நாயர் சாப்பிட உட்கார்ந்தான். தேவகிதான் இருவருக்கும் பரிமாறினாள். அந்த வாலிபனின் பெயர் மாதவன் என்றும், பாலக்காட்டிலிருந்து சுமார் முப்பது மைல் தூரத்திலிருந்த மருதக்கரையில் ஏதோ வேலை பார்ப்பதாகவும் தெரிந்து கொண்டாள்.

சற்று நேரம் பொறுத்து அவனை யனுப்பி விட்டு உள்ளே வந்தான் குஞ்சன் நாயர். கடையிலிருந்த பார்க்கவி அன்று வந்த புஸ்தகக் கட்டைத் திறந்து புஸ்தகங்களை யெல்லாம் அலமாரியில் ஒழுங்காக அடுக்கிக் கொண்டிருந்தாள். உள்ளே ஆளில்லாததைக் கண்ட தேவகி தண்ணீர் கொண்டுவரக் குடத்தை யெடுத்துக் கொண்டு கிணற்றண்டை போனாள்.

ஜலத்துடன் அவள் உள்ளே நுழையும் பொழுது குஞ்சன் நாயர் தன் தாயார் பொன்னம்மையிடம், ''பார்க்கவியைக் கொடுத்தால் பண்ணிக் கொள்ளுவதாக மாதவன் சொல்லுகிறான். என்ன செய்வது? தேவகி இருக்கும் பொழுது பார்க்கவிக்கு முதலில் எப்படி விவாகம் செய்வது? ஒன்றுமே தெரியவில்லை, அம்மா!'' என்று சொல்லிக் கொண்டிருந்தது அவள் காதில் தெளிவாக விழுந்தது.

இடுப்பிலிருந்த குடத்தைத் தழுவிப் பிடித்தபடியே ஒரு விநாடி ஸ்தம்பித்து நின்றாள் தேவகி. அவள் நெஞ்சில் ஏதோ அடைப்பது போலிருந்தது. சட்டென்று சமாளித்துக் கொண்டு உள்ளே நுழைந்து பரபரவென்று வேலைகளைச் செய்ய ஆரம்பித்தாள். தகப்பனின் வாடிய முகத்தை ஜாடையாகக் கவனித்த பொழுது அவளுக்குத் தன் பேரிலேயே வெறுப்புண்டாயிற்று. அழகும் இல்லாமல், கவர்ச்சியுமில்லாமல், தன்னைப் படைத்த கடவுளின் மீது அவள் ஆத்திரமடைந்தாள்.

* * *

நாட்கள் ஓடின; இதற்கிடையில் மாதவன் எதை எதையோ சாக்கிட்டு நாலைந்து தடவை கடைக்கு வந்து போய் விட்டான். அப்பொழுதெல்லாம் அவன் தன் தங்கையுடன் சிரித்துச் சிரித்துப் பேசியதையும், அவளுக்கு மட்டிலும் சிறு சிறு வெகுமதிகளை கொண்டு வந்து கொடுத்ததையும் கண்ட பேதை தேவகியின் மனம் விம்மிப் பொருமியது.

அவளுக்கும் ஒரு பையனைப் பார்த்து, இரண்டு பெண்களுக்கும் ஒன்றாகவே கல்யாணத்தை நடத்திவிட வேண்டுமென்று பாட்டி பொன்னம்மை துடித்தாள். குஞ்சன் நாயரும் அதற்காகப் பகீரதப் பிரயத்தனம் செய்தான். ஒன்றும் பலிக்கவில்லை.

அவ்வருஷம் பாலக்காட்டில் மிகக் கடுமையான வெய்யில் காரணமாக வைசூரி பரவியது. முனிசிபல் அதிகாரிகள் எவ்வளவு முயன்றும் வியாதியின் வேகத்தைத் தடுக்க முடியவில்லை.

குஞ்சன் நாயரின் வீட்டிலும் நுழைந்தாள் மகமாயி. முதலில் கிழவி பொன்னம்மை பலியானாள். அவள் இறந்த ஒரு வாரத்துக்கெல்லாம் குஞ்சன் நாயரும் வைசூரியால் தாக்கப்பட்டு மரணமடைந்தான். பெண்களிருவரும் தனியாக விடப்பட்டனர். சில நாட்கள் வரையிலும் வீட்டில் இருள் மூடிக்கிடந்தது. முதலில் மனோதிடமடைந்தவள் தேவகிதான். மெல்லத் தேறி மீண்டும் வியாபாரத்தையும் கடையையும் கவனிக்கலானாள். ஆயினும் அவளுடைய இருதயம் மட்டிலும் அர்த்தமற்ற ஒரு வேதனையால் விம்மித் தவித்துக் கொண்டிருந்தது. 'ஆயிற்று, எப்படியும்



இன்னும் சில மாதங்களுக்குள் பார்க்கவியின் திருமணம் முடிந்துவிடும்; மாதவன் அவளை யழைத்துப் போய்விடுவான். பிறகு தான் மட்டும் தன்னந்தனியாக அவ் வீட்டில்,……ஓ!……கடவுளே! எத்தனை வருஷம்?……எத்தனை வருஷம்?…… கண் மங்கி,……முதுகு கூனி,…கோலூன்றி,…ஏ,……ஐயனாரப்பா? நினைக்கவே முடியவில்லையே……!' என்று ஏங்கினாள்.

## 3

அப்பொழுது படபடவென்று யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டது.

திடுக்கிட்டு எழுந்தாள் தேவகி. நிமிர்ந்து கடிகாரத்தைப் பார்த்தாள். மணி பதினொன்று. மீண்டும் கதவைப் பலமாகத் தட்டும் சத்தம் கேட்டது. 'இந்த வேளைக்கு மேல் புஸ்தகம் வாங்க யார் வந்திருப்பார்கள்?' என்றெண்ணியபடியே அவிழ்ந்து தொங்கிய கூந்தலைச் சேர்த்து முடிந்து கொண்டு, தேவகி கையிலே விளக்குடன் வேகமாய்க் கடைக்குள் நுழைந்து கதவைத் திறந்தாள். உயரமான ஒரு வாலிபன் உள்ளே நுழைந்தான். தேவகி வியப்புடன் ஒதுங்கி நின்றாள். விளக்கின் மங்கலான வெளிச்சத்தில் அவனுடைய முகம் அரைகுறையாகத் தெரிந்தது. ஒரு தடவை அவனை நிமிர்ந்து பார்த்துவிட்டுச் 'சட்'டென்று தன் விழிகளைத் தாழ்த்திக் கொண்டாள் அவள். தேவகியின் உடம்பு முழுதும் மின்சாரம் தாக்கியது போன்ற உணர்ச்சி பரவியது. குபீரென்று சிவந்த முகத்துடன் அவனையே ஒரு கணம் வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றாள். அடுத்த கணமே அவளுக்கு இயற்கையான சங்கோசம் வந்து மூடிக் கொண்டது. கையிலிருந்த விளக்கை அங்கேயிருந்த ஒரு பெட்டியின்மீது வைத்தாள். தன் கைகள் நடுங்குவதைக் கண்ட அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''மன்னிக்கவேண்டும். லலிதா ஸஹஸ்ரநாமம் ஒரு புத்தகம் எனக்கு அவசரமாக வேண்டும்;— அதற்காகத்தான் இந்த அகாலத்தில் வந்தேன்!'' என்று குழப்பத்துடன் சொன்னான் அவன்.

வியப்புடன் அவனை நோக்கினாள் தேவகி. 'மாதவனைக் காட்டிலும் இவன் நன்றாயிருக்கிறான்!—இன்னும் சிவப்பு! இந்த ஊருக்குப் புதிது போலிருக்கு; நாம் இதுவரையில் பார்த்ததில்லையே!' என்று எண்ணியபடி சிலைபோல் நின்றாள்.

''உங்களிடம் லலிதா ஸஹஸ்ரநாமம் இல்லையா?'' என்று பொறுமை யிழந்த குரலில் வெளியிலிருந்து வந்த அவனுடைய கேள்வி அவளுடைய எண்ணங்களைச் 'சட்'டென்று அணை போட்டுத் தடுத்தது.

உடனே சமாளித்துக் கொண்டு குழப்பத்துடன் ''இருக்கிறது!…ஆனால் இனிமேல்தான் புஸ்தகக் கட்டைத் திறந்து எடுக்க வேண்டும்;— நாளைக் காலையில் வந்தால் சௌகரியமாயிருக்கும்'' என்றாள்.

ஒரு நிமிஷம் வாயடைத்து நின்றான் அவன். பிறகு அவளை ஏறெடுத்துப் பார்த்தபடியே, ''இல்லையில்லை! எனக்கு இப்பொழுதே வேண்டும்! நான் நேற்றுக் கப்பலில்தான் பினாங்கிலிருந்து சென்னையில் வந்து இறங்கினேன்.—சாயங்காலமே மங்களூர் வண்டியில் புறப்பட்டேன். வழியில் ஃசலத்தில் ஏற்பட்ட விபத்தினால் காலையில் பாலக்காடு வரவேண்டிய வண்டி சற்று முன்புதான் வந்தது. நாளைக்கு வருஷப் பிறப்பல்லவா? வருஷப் பிறப்புக்கு ஊருக்குப் போய்விட வேண்டும். வரும்பொழுது லலிதா ஸஹஸ்ரநாமம் அவசியம் வாங்கி வருவதாக அவளுக்குச் சொல்லியிருக்கிறேன்; அதற்காக ஆவலோடு காத்திருப்பாள்!''—என்று மூச்சு விடாமல் படபடவென்று பேசினான் அவன். அவன் மனதிலிருந்த உத்வேகம் குரலில் தொனித்தது.

''அவள்!…அவள்!…'' தேவகியின் தலையில் யாரோ சம்மட்டியால் ஓங்கி அடித்தது போலிருந்தது. அந்த வாலிபனும், தன்னைச் சுற்றியிருந்த புஸ்தக அலமாரிகளும், சுற்றிச் சுழலுவது போன்ற பிரமை தோன்றியது. வெறிச்சோடிய அவள் பார்வை அவன் முகத்தில் பதிந்தது.

வெண்மையான பல்வரிசை தெரியப் புன்னகை செய்தபடியே மீண்டும் பேசினான் அவன்: ''அகாலத்தில் உங்களைத் தொந்தரவு செய்கிறேன்; மன்னிக்க வேண்டும்;—வாசலில் வண்டி நிற்கிறது. இப்பொழுதே புறப்பட்டால்தான் விடியற்காலை என்னால் ஆலத்தூர் போய்ச் சேர முடியும்! நீங்கள் கட்டைக் காண்பித்தால் நானே திறந்து எடுத்துக் கொள்ளுகிறேன்!'' நயமான குரலில் வெளிவந்த இவ்வார்த்தைகளைக் கேட்ட தேவகி அலமாரியிலிருந்து ஒரு சிறிய கத்தியை யெடுத்து அவனிடம் கொடுத்துவிட்டு, மூலையில் வைக்கப்பட்டிருந்த புஸ்தகக் கட்டைச் சுட்டிக் காண்பித்தாள். தான் பேசும் சக்தியை அடியோடு இழந்துவிட்டதாக அவளுக்குத் தோன்றியது.

இரண்டே நிமிஷத்தில் கட்டைப் பிரித்து அவன் அதற்குள்ளிருந்த புத்தகங்களில் ஒன்றைக் கையிலெடுத்துக் கொண்டான். பிறகு, ''இதன் விலையென்ன?'' என்று கேட்டான்.

''பத்தணா!'' என்றாள் தேவகி.

ஜேபியிலிருந்த தோல் பையிலிருந்து பத்தணாவை யெடுத்து மேஜையின் மீது

• கைத்தான். பிறகு புஸ்தகமும் கையுமாக "நான் போய் வருகிறேன். உங்களுக்கு ரொம்ப சிரமம் கொடுத்து விட்டேன்!" என்று சொல்லிவிட்டு அவனுடைய பதிலுக்குக் காத்திராமல் வேகமாய் வெளியே போய் விட்டான். சில விநாடிக்கெல்லாம் 'கல் கல்' என்று வண்டி மாடுகளின் சலங்கையொலியுடன் வாசலில் நின்றிருந்த வண்டி புறப்பட்டுப் போய்விட்டது. ஒரு பெருமூச்சு விட்டாள் தேவகி.

கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே வந்தாள் தேவகி. விளக்கைத் தணித்து விட்டு மீண்டும் படுக்கையில் படுத்துக் கொண்டாள்.

அவளுக்கு அழுகை வெடித்து வந்தது. யாருக்காக? — எதற்காக? — அழ வேண்டிய அவசியமென்ன? — கையில் கிடைத்த ஏதோவொரு அரிய வஸ்துவைத் தவற விட்டுவிட்ட ஏமாற்ற உணர்ச்சி அவளைக் கவ்விக் கொண்டது. அந்த வஸ்து என்னது? அதுதான் அவளுக்கு விளங்கவில்லை. திரும்பிப் பார்த்தாள். நிம்மதியாய்த் தூங்கிக் கொண்டிருந்தாள் பார்க்கவி. தேவகியின் கண்களில் நீர் பொங்கி வந்தது. வருஷக் கணக்காக அடக்கி வைத்திருந்த துயரச் சுமையை வெடித்து வந்த அழுகையின் மூலம் தீர்த்துக்கொண்டாள்.

4

"அக்கா! அக்கா!—எழுந்திருக்கவில்லையா? வருஷப் பிறப்பாயிற்றே!—மணி ஆறடிக்கப் போகிறதே!" என்று தமக்கையை எழுப்பினாள் பார்க்கவி.

சட்டென்று எழுந்து உட்கார்ந்தாள் தேவகி.

நிலைக் கண்ணாடி யருகில் குத்து விளக்கேற்றி வைத்திருந்தாள் பார்க்கவி. அன்று வருஷப் பிறப்பு. தேவகி கட்டிலிலிருந்து இறங்கி விளக்கை நமஸ்கரித்தாள். இரவு வந்த வாலிபனின் உருவம் அவள் மனதில் எழுந்தது. "அக்கா!...போன வருஷப் பிறப்பு உனக்கு நினைவிருக்கிறதா? பாட்டியும் அப்பாவும் இருந்தார்கள்; எவ்வளவு சந்தோஷமாயிருந்தது?" என்றாள் பார்க்கவி. தேவகியின் விழிக் கடையில் நீர் முட்டியது.

'ஆனால் உனக்கு...மாதவனாவது இருக்கிறான்! எனக்கு...எனக்கு......' என்று மனதுக்குள் விம்மிக் கொண்டே வேகமாய்ச் சமயலறைக்குள் நுழைந்தாள். கடகடவென்று அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகலாயிற்று. வியப்புடன் அவளைப் பார்த்த பார்க்கவி ஒரு விநாடி மௌனமாய் நின்றாள். பிறகு தமக்கையைத் தொடர்ந்து உள்ளே போனாள்.

# பூதம் காத்த சுரங்கம்

- சந்திரா.

## 1. அது என்ன சத்தம்?

"வீரசேனா!"

"ஏன், அம்மா!"

"நீ இனிமேல் இப்படி ஊர் சுற்றிக் கொண்டு வந்தால் பலனில்லை. எங்கே யாவது வெளி நாடுகளுக்குச் சென்று சம்பாதித்து வரவேண்டும்" என்றாள் வீரசேனனின் தாயார்.

வீரசேனன் அதைக் காதில் வாங் கிக் கொள்ளாமல் ஓடிவிட்டான்.

ஓடியவன் அடுத்த சில நிமிஷங்களுக் கெல்லாம் உள்ளே வந்தான். அவ னுடைய தாயார் அழுது கொண்டே உட்கார்ந்திருந்தாள். அதைப் பார்த்த வுடன் வீரசேனனுக்கு மனதை என் னவோ செய்தது. தினம் தினம் அவன் தாயார் எதை யோ நினைத்துக் கொண்டு சதா அழுது கொண் டிருப்பாள். வீர சேனன் 'ஏன் அம்மா அழுகிறீர்கள்?' என்று கேட் பான். அவள் பதில் ஒன்றும் சொல் லாமல் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு காரியங்களைக் கவனிக்கச் சென்று விடுவாள். இன்றைக்கு எப் படியாவது தன் தாயார் அழுது கொண்டிருக்கும் காரணத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று அவன் தீர்மானித்து விட்டான்.



"அம்மா! நீங்கள் சதா அழுது கொண்டிருக்கிறீர்களே, ஏன் அம்மா?" என்று அன்போடு கேட்டான்.

வீரசேனன் கேள்விக்குப் பதில் சொல்லாமல் அவன் தாயார் தலையைக் குனிந்த வண்ணம் மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

"அம்மா! நீங்கள் அடிக்கடி அழும் காரணத்தைச் சொல்லுங்கள். நான் இன்றே வெளிநாடுகளுக்குச் சென்று பணம் சம்பாதித்து வருகிறேன்" என்று சொன்னான் வீரசேனன்.

வீரசேனனின் தாய் அவனை நிமிர்ந்து பார்த்தாள். "வீரசேனா! என்றைக் காவது ஒரு நாள் நான் அழுது அழுது

சாகும் காரணத்தைச் சொல்லத்தான் வேண்டும். உனக்கு வயது வந்த பிறகு சொல்லலாம் என்றிருந்தேன். நீ பெரிய பையனாகியும் இன்னும் சிறு குழந்தை போலவே இருக்கிறாயே என்றுதான் கவலையாக இருக்கிறது'' என்று சொல்லி மீண்டும் மௌனமாக உட்கார்ந்து விட்டாள்.

வீரசேனனுக்கு வயது பதினாறு இருக்கும். செக்கச் செவேலென்று இருப்பான். புள்ளிமான் போலத் துள்ளித் துள்ளி விளையாடுவான். எப்பொழுது பார்த்தாலும் சிரித்துக் கொண்டும் பாடிக் கொண்டும் சிறு குழந்தையைப் போல விஷமம் பண்ணிக் கொண்டும் இருப்பான். இன்றைக்கு அவன் மனதிலே ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டுவிட்டது. "அம்மா! இனிமேல் நீங்கள் சொன்னதையெல்லாம் கேட்கிறேன். வெளி நாடுகளுக்குப் போய் வேண்டிய பணம் சம்பாதித்துக் கொண்டு வருகிறேன். நீங்கள் அழுது கொண்டிருக்கும் காரணத்தைச் சொல்லுங்கள்'' என்றான்.

வீரசேனனின் தாயார் தொண்டையைக் கனைத்துக் கொண்டு "தம்பி, வீரசேனா! சொல்லுகிறேன் கேள். அந்த சோகக் கதையைச் சொல்லுகிறேன் கேள்'' என்று ஆரம்பித்தாள்.

வீரசேனனும் தன் தாய் என்ன சொல்லப் போகிறாளோ என்று ஆவலுடன் அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தான்.



"பத்து வருஷங்களுக்கு முன் நீ நாலு வயதுக் குழந்தையாக இருந்தாய். அப்பொழுது இந்த நாட்டை மார்த்தாண்டன் என்னும் அரசர் ஆண்டு வந்தார். மார்த்தாண்ட மன்னரைப் பார்த்தால் பார்த்துக் கொண்டேயிருக்கலாம். அவ்வளவு அழகாக இருப்பார். ஆறு அடி உயரம். நீளமான கைகள். அகன்ற மார்பு. எடுப்பான மூக்கு. விசாலமான நெற்றி. தலை மயிர் சுருள் சுருளாக இருக்கும். அந்த மன்னரை நீ பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை......'' என்று சொல்லி ஏக்கத்துடன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள் வீரசேனனின் தாயார்.

"ராஜா என்றால் அழகாக இருக்காமல் பின் எப்படி அம்மா இருப்பார், இதைப் போய்ப் பிரமாதமாகச் சொல்கிறீர்களே'' என்றான் வீரசேனன்.

"இப்பொழுது மனிதர்களைப் பார்த்தால் குள்ளக் கத்திரிக்காய் மாதிரி அந்தமில்லாமல் அழகில்லாமல் இருக்கிறார்களே, அப்படி இல்லை அவர். மார்த்தாண்டர் சித்திரத்தில் எழுதிய சக்கரவர்த்தி போல இருந்தார். அதனால்தான் சொன்னேன்'' என்று சொல்லிக் கதையைத் தொடர்ந்தாள்:

"மார்த்தாண்ட மன்னருக்குத் தன் மனைவி மீதும் மகன் மீதும் எல்லையற்ற அன்பு. அது போலவே தன் நாட்டு மக்கள் மீதும் அளவற்ற அன்பு பாராட்டி வந்தார். இன்று நம் நாடு பாழ்பட்டுக் கிடக்கிறதே, வறுமை மிஞ்சி இது போலவா இருந்தது? இல்லை. அவர் அரசாண்ட போது தேசத்தை நல்ல நிலைமையில் வைத்திருந்தார். மக்கள் பசி இல்லாமல் இருந்தனர். தேசத்தில் எங்கு பார்த்தாலும் ஆடலும் பாடலும் தேரும் திருவிழாவுமாக இருக்கும்.

"மன்னர் பகல் முழுவதும் ராஜ சபையில் அமர்ந்து ராஜாங்க காரியங்களைக் கவனிப்பார். இரவெல்லாம் மாறுவேடம் புனைந்து தேச மக்களின் க்ஷேமங்களை நேரிலேயே போய்ப் பார்த்துத் தீர்த்து வைப்பார். ஜனங்கள் எல்லாரும் மார்த்தாண்ட மன்னரைப் புகழ்ந்தார்கள். இப்படி நம் நாட்டின் வளமும், மன்னரின் புகழும் பெருகி வருவது வேறு நாட்டு அரசர்களுக்குப் பொறாமையாக இருந்தது. எப்படியாவது நம் தேசத்தை அடிமைப்படுத்தவேண்டும் என்று தீர்மானித்து விட்டார்கள். அவர்களுக்கு உடந்தையாக மார்த்தாண்ட மன்னரின் மந்திரிகளில் ஒருவரும் சேனைத் தலைவரும் சதி செய்ய ஆரம்பித்தனர். மன்னரோ மந்திரியையும் சேனைத் தலைவரையும் முழுக்க முழுக்க நம்பியிருந்தார்.

"ஒரு நாள் போர் வீரர்களின் விளையாட்டு ஒன்று நடந்தது. விளையாட்டில் மன்னருடைய வீரர்கள் என்றும் மந்திரியின் வீரர்கள் என்றும் இரண்டு பகுதிகளாகப் பிரிந்து கொண்டனர். மார்த்தாண்ட மன்னர் இதையெல்லாம் வெறும் விளையாட்டுத்தானே என்று பார்த்துக் கொண்டிருந்தார். சேனைகள் எல்லாம் விளையாட்டில் ஈடுபட்டிருந்தன. மன்னர் கவனமும் விளையாட்டில் இருந்தது. இந்தச் சமயத்தில் மன்னரின் சேனையை மந்திரியின் சேனை தோற்கடித்து விட்டது. திடீரென்று ஒரு பெரும்படை வந்து சூழ்ந்து கொண்டது. மன்னர் திடுக்கிட்டார். மன்னருக்கு விரோதமாகச் சதி செய்து வந்த மந்திரியும் சேனைத் தலைவரும் அந்த எதிரிப் படைகளுடன் சேர்ந்து கொண்டு மன்னரைக் கைது செய்து விட்டனர்" என்றாள்.

"அடாடா! ராஜாவைக் கைது செய்து விட்டார்களா? ராஜா அப்பொழுது சும்மாவே இருந்தாரா? வீரமில்லாத அரசர்" என்று சொல்லி முகத்தைச் சுளித்தான் வீரசேனன்.

"ராஜா சும்மா இருந்தாரா? அவரை இலேசில் கைதுசெய்ய முடிந்ததா? இல்லை. விளையாட்டு வினையானதைக் கண்டவுடன் தம் மெய்க் காவலர்களில் ஒருவனைக் கூப்பிட்டு அவனிடம் தன் மனைவியையும் குழந்தையையும் காப்பாற்றும்படி கூறித் தம் உடைவாளை கையில் எடுத்தார். சக்கரம் சுழலுவது போல அவர் வாள் சுழன்றது. எதிரிகளின் தலை வேறு உடல் வேறாக வேரற்ற மரம்போலச் சாய்ந்தன. மிகவும் கடுமையாகப் போர் புரிந்தார். எதிரிகள் நடுநடுங்கி விட்டனர். மார்த்தாண்டர் எவ்வளவு வீரமாகப் போர் புரிந்தார் தெரியுமா? அவர் புரிந்த வீரச் செயல்களைப் பற்றி எத்தனையோ கவிகள் புகழ்ந்து பாடியிருக்கிறார்களே! கடைசியில் மன்னரின் அகன்ற மார்பிலே ஒரு வேல் பாய்ந்துவிட்டது. அந்த வேலை ஒரு கையால் பிடித்துக் கொண்டே



போர் புரிந்தார். உடம்பிலிருந்து ஏராளமான ரத்தம் சிந்தியதால் மயங்கி விழுந்து விட்டார். அப்பொழுதுதான் எதிரிகள் அவரைக் கைது செய்தனர்.

"மன்னரைக் கைது செய்து என்ன பயன்? அவர் உயிர் எப்பொழுதோ வீர சொர்க்கத்துக்குச் சென்றுவிட்டது. அரசன் செய்தி சொல்லி அனுப்பிய மெய்க்காவலன் அந்தப்புரத்துக்கு ஓடிவந்தான். அவன் உடம்பெல்லாம் போர்க் காயங்கள்பட்டு ரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது. மார்த்தாண்டரின் பட்டமகிஷிக்கு இதெல்லாம் ஒன்றும் தெரியாது. அவள் தன் குழந்தையுடன் கொஞ்சிக் கொண்டிருந்தாள். அரசனின் மெய்க்காவலன் ரத்தம் சொட்ட வந்து நின்றதைப் பார்த்தவுடன் ராணி நடு நடுங்கி விட்டாள். அரசருக்கு ஏதாவது ஆபத்தா என்று படபடப்புடன் கேட்டாள். 'பேசுவதற்கு ஒன்றும் நேரமில்லை. அரசர் உங்களையும் இளவரசரையும் காப்பாற்றச் சொன்னார். ஐந்து மைல்களுக்கு அப்பால் உள்ள பூதம் காத்த சுரங்கமாளிகைக்குத் தங்களையும் இளவரசரையும் கொண்டு விடச் சொன்னார்' என்று சொல்லி ராணியையும் அவள் குழந்தையையும் அழைத்துக் கொண்டு அரண்மனைக்கு வெளியில் வந்தான். அங்கு காத்திருந்த குதிரையில் ராணியையும் குழந்தையும் ஏற்றிக் கொண்டு கிளம்பினான். குதிரை வாயுவேக மனோவேகமாகப் பறந்தது. அப்படிக் குதிரையில் வரும் பொழுதுதான் மேலே நான் சொன்ன கதையை ராணிக்கு அவன் சொல்லிக் கொண்டே வந்தான். குதிரை சுரங்க மாளிகைக்கு வந்ததும் சொல்லி வைத்தது போலச் சட்டென்று நின்றது. ராணியையும் குழந்தையையும் இறக்கி விட்டுத் தானும் இறங்கினான். ராணியின் கையில் ஒரு பெரிய பண முடிப்பைக் கொடுத்தான். மறு கணம் தாகமாக இருக்கிறது என்று சொல்லி மயங்கி விழுந்து விட்டான். ராணி சுரங்க மாளிகைக்குள் சென்று தண்ணீர் கொண்டு வந்தாள். அதற்குள் அந்த வீரன், அரசனின் மெய்க்காவலன், ராணியையும் அவள் குமாரனையும் காப்பாற்றிய உத்தமன் இறந்து விட்டான்" என்று சொன்னபோது வீரசேனனின் தாயார் கண்களில் கண்ணீர் பெருகியது. வீரசேனனுக்கும் துக்கம் தொண்டையை அடைத்தது. "அம்மா! பிறகு ராணியும் அவள் குழந்தையும் என்ன ஆனார்கள்? அந்தச் சுரங்க மாளிகை எங்கே இருக்கிறது?" என்று ஆவலோடு கேட்டான்.

பொங்கி வரும் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு "குழந்தாய் வீரசேனா! புகழ் பெற்ற மார்த்தாண்ட மன்னரின் மனைவி, இந்த நாட்டுப் பட்டத்து ராணிதான் உன் தாய். நீதான் இந்த நாட்டின் இளவரசன். நாம் இத்தனை காலமாக வசித்து வருகிறோமே இந்த மாளிகைதான் சுரங்க மாளிகை" என்று சொல்லி வீரசேனனை அப்படியே தழுவிக் கொண்டாள்.

"அம்மா! இன்று முதல் நீங்கள் அழுவதை நிறுத்தி விடுங்கள். நாளைக்கே நான் வெளிநாடு சென்று பணம் சம்பாதித்து வருகிறேன். அப்படியே இந்த நாட்டையும் மீட்க ஏற்பாடு செய்கிறேன்" என்றான்.

அப்பொழுது "வீரசேனா!" என்று பயங்கரக் குரலில் யாரோ கூப்பிடுவது போலிருந்தது. வீரசேனனும் அவனுடைய தாயும் 'அது என்ன சத்தம்' என்று கேட்டுக் கொண்டே திரும்பிப் பார்த்தனர்

(தொடரும்)






## ஈராக்—1

ஆப்கானிஸ்தானையும் ஈரானையும் கடந்து இப்போது ஈராக் தேசத்துக்கு வந்திருக்கிறோம்.

இது இரட்டை நதிகள் ஓடும் நாடு என்று பிரசித்தி பெற்றது. ஈராக் அல்லது மெசொபொடேமியாதான் முதலாவது உலக மகா யுத்தகளமாக அமைந்தது என்பதை யாரும் மறந்திருக்க முடியாது.

உலகத்திலே நாகரிகத்தின் சிகரமாக விளங்கி, பிறகு கால வெள்ளத்தில் மூழ்கி மறைந்த பேபிலோன் சாம்ராஜ்யத்தின் பிறப்பிடம் இன்றைய ஈராக் நாடுதான்.

உலகத்தில் ஏராளமாக எண்ணெய் உற்பத்தியாகும் ஒரு சில நாடுகளில் ஈராக்கும் ஒன்று. அகில உலகிலும் உற்பத்தியாகும் பேரீச்சம் பழங்களில் எண்பது சத விகிதத்துக்கு மேல் இந்த நாட்டில்தான் உற்பத்தியாகின்றன.

கிறிஸ்தவ வேதமான பைபிளில் ஆதாம் என்ற ஆதி மனிதனுக்காகவும் ஏவாள் என்ற ஆதிப் பெண்ணுக்காகவும் கடவுள் ஓர் அழகிய நந்தவனத்தைச் சிருஷ்டித்ததாகக் கூறப்படுகிறது. அப்படிப்பட்ட தெய்விக நந்தவனம் (Garden of Eden) ஈராக்கைச் சேர்ந்த இரண்டு பெரிய நதிகளுக்கு இடையேதான் இருந்ததாகச் சொல்லுகிறார்கள். இதிலிருந்து அந்தப் பிரதேசத்தின் செழுமையை அறிந்து கொள்ளலாம்.

அத்தகைய வளம் பொருந்திய பூமியில்தான் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் கால்டியா, பேபிலோனியா, அஸிரியா சாம்ராஜ்யங்கள் தோன்றி மறைந்தன. கால்டியா சாம்ராஜ்யம் மறைந்து சுமார் ஏழாயிரம் வருஷங்கள் ஆகின்றன!

கடைசியாக கிறிஸ்து பிறப்பதற்கு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் அந்த நாடு பாரசீக சாம்ராஜ்யத்தின் ஆதிக்கத்துக்கு இலக்காக நேர்ந்தது. அதிலிருந்து இருநூறு வருஷங்களுக்குப் பிறகுதான் அந்தப் பிரதேசங்களில் மகா அலெக்ஸாண்டர் வெற்றிக் கொடியை நாட்டி, இந்தியாவிலும் பிரவேசிக்கலானார். ஏற்கெனவே ஈராக்கில் பல சாம்ராஜ்யங்கள் தோன்றி மறைந்ததைப் போலவே, அலெக்ஸாண்டர் நிறுவிய சாம்ராஜ்யத்தின் கதியும் அற்பாயுளாக முடிந்தது.

அலெக்ஸாண்டரின் ஆதிக்கம் மறைந்த பிறகு, ஈராக் தேசத்தை அராபியர்கள் கைப்பற்றினர். பிறகு அது துருக்கி சாம்ராஜ்யத்தின் கீழ் வந்தது.

அந்த நாட்டில் தோன்றி மறைந்த சாம்ராஜ்யங்களைப் பற்றிய ஆதாரபூர்வமான விவரங்கள் அடங்கிய புராதனக் கல்வெட்டுகள் இன்னும் பிரிட்டிஷ் காட்சிசாலையில் வைக்கப்பட்டிருக்கின்றன.

ஈராக் துருக்கி சாம்ராஜ்யத்தைச் சேர்ந்ததாக இருந்தபோதுதான் 1914-ம் வருஷம் முதலாவது மகா யுத்தம் மூண்டது. அந்த வருஷம் நவம்பர் மாதம் இங்கிலாந்தும் பிரான்சும் துருக்கி சாம்

ராஜ்யத்தின் மீது போர் தொடுத்தன. உடனே பிரிட்டிஷ் சர்க்கார் ஆயிரக்கணக்கான இந்தியத் துருப்புகளை மெஸொபொடேமியாவுக்கு அனுப்பினர்.

பிரிட்டிஷாருக்கும் துருக்கியர்களுக்கும் நடந்த போரில் பிரிட்டிஷார் பல தடவை தோல்வியடைந்தார்கள். எனினும், இறுதியில் 1917-ம் வருஷம் பிரிட்டிஷார் வெற்றி பெற்று, பாக்தாத் நகருக்குள் பிரவேசித்தனர். சுமார் எழுநூறு வருஷ காலம் ஆதிக்கம் செலுத்திய துருக்கி சாம்ராஜ்யம் அவ்வாறாக மறைந்தது.

பிறகு பிரிட்டிஷார் ஈராக்கில் ஸ்திரமாகத் தங்களுடைய ஆதிக்கத்தை ஏற்படுத்த முற்பட்டார்கள். அதற்கு முக்கிய காரணம் ஈராக்கில் கிடைக்கும் எண்ணெய்ச் செல்வம்தான் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

ஆனால் பிரிட்டனின் சூழ்ச்சிக்கு அமெரிக்கா இடம் கொடுக்காததால், பிரிட்டன் தன் முயற்சியைக் கைவிட வேண்டியதாயிற்று. ஆயினும் என்ன? ஈராக்கில் பிரிட்டிஷாரின் நேரடியான ஆதிக்கம் ஏற்படவில்லை யாயினும், அங்கு அவர்களுடைய செல்வாக்கு குறையாமல் இருப்பதற்காக அரேபியா லாரென்ஸ் என்ற பிரசித்தி பெற்ற ஒற்றர் இடைவிடாது வேலை செய்து வந்தார்.

அதன் பலனாக, 1919-ம் வருஷம் வர்செயில்ஸ் உடன்படிக்கை ஏற்பட்டபோது, ஏற்கனவே துருக்கி சாம்ராஜ்யத்துக்கு உட்பட்டிருந்த சிரியா, பாலஸ்தீனம், டிரான்ஸ்ஜார்டன் முதலிய பிரதேசங்கள் பிரிட்டன் முதலிய நேச நாடுகளின் மேற்பார்வையில் இருக்கவேண்டும் என்ற ஷரத்து சேர்க்கப்பட்டது.

அந்த ஷரத்து ஈராக் மக்களிடையே மிகுந்த மனக் கொதிப்பை உண்டாக்கியது. நேச நாடுகள் தங்களுக்கு ஆசை வார்த்தைகள் கூறி, இறுதியில் தங்களை வஞ்சித்து விட்டதாக அவர்கள் ஆத்திரம் அடைந்தனர்.

சிரியா நிர்வாகம் பிரான்ஸின் மேற்பார்வையில் விடப்பட்டது. மெஸொபொடேமியா அல்லது ஈராக், பாலஸ்தீனம் முதலிய அரபு நாடுகளின் நிர்வாக அதிகாரம் பிரிட்டனிடம் விடப்பட்டது.

இதைப் பற்றிப் பண்டித ஜவாஹர்லால் நேரு எழுதியுள்ள சரித்திரத்தில், "அந்த நாட்டு மக்களைப் பிரிட்டிஷாரின் மேற்பார்வையில் விட்டது பசுக்கள் அல்லது மான்களின் நலன்களைப் புலியிடம் ஒப்படைத்தது போல் ஆயிற்று" என்று சுருங்கக் கூறி விளங்க வைத்திருக்கிறார்!


ஈராக் தேசத்துச் சிறுமி

வர்செயில்ஸ் உடன்படிக்கையின் அநீதியைச் சகிக்க முடியாமல் ஈராக் நாட்டினர் இரகசிய சங்கங்களை அமைத்துக் கிளர்ச்சி செய்யத் தொடங்கினார்கள்.

ஈராக் மக்களின் மேற்படி தேசியக் கிளர்ச்சியை அடக்குவதற்காகப் பிரிட்டிஷார் வழக்கம் போல் பயங்கரமான அடக்கு முறைகளைப் பிரயோகித்தார்கள். ஈராக் மக்களின் தேசிய அபிலாஷைகளை நசுக்க அக்கிரமமாக இந்தியத் துருப்புகளை உபயோகித்தார்கள்.

எனினும் கடைசியில் மக்களின் கட்சியே வெற்றி யடைந்தது. இறுதியாக, தங்களுடைய மேற்பார்வையில், சர்வதேச சங்கத்தினுடைய உத்தரவாதத்தின் கீழ் ஈராக்கில் சுதந்திர சர்க்காரை அமைக்கப் பிரிட்டிஷார் இசைந்தனர்.

சர்வ தேச சங்கத்தினுடைய உத்தரவாதத்தின் கீழ் அந்த நாட்டில் 'சுதந்திர' அரசாங்கம் எவ்வாறு அமுல் நடத்தப்பட்டது என்பதை ஒரு சில வார்த்தைகளில் சொல்லி விடலாம்.

ஈராக் மக்கள் சுட்டுக் கொல்லப்பட்டனர்; அவர்களுடைய தலைவர்கள் நாடு கடத்தப் பட்டனர்; பத்திரிகைகள் அடக்குமுறைப் பாணங்களுக்கு இலக்காயின; நகரங்கள், கிராமங்களின் மீது வெடிகுண்டுகள் வீசப்பட்டன. நாடெங்கும் இராணுவச் சட்டம் பிரகடனம் செய்யப்பட்டது. இவ்வாறாக ஈராக் மக்கள் சுதந்திர சர்க்காரை நிர்வாகிப்பதற்குப் பயிற்சி பெற்றனர்!

கடைசியாக, 1921-ம் ஆண்டில் பிரிட்டிஷார் தங்களுடைய நண்பரான பெய்ஸல் என்பவரை ஈராக் மன்னராகப் பிரகடனம் செய்தார்கள். மந்திரி சபையை அமைக்கவும் இசைந்தார்கள். ஷெ பெய்ஸல்தான் முதலாவது மகா யுத்தத்தின் போது துருக்கிக்கு விரோதமாகவும் பிரிட்டனுக்குச் சாதகமாகவும் அராபியர்களின் கிளர்ச்சியைத் தூண்டி விட்டவர்.

பெய்ஸல் மன்னராக வந்த பிறகும் ஈராக் மக்களின் கிளர்ச்சி அடங்கவில்லை. பூரண சுயேச்சையைத் தவிர, வேறு எவ்வித ஆட்சி முறைக்கும் உட்பட முடியாது என்று அவர்கள் அறிவித்து விட்டார்கள்.




மதுசூதனனுக்கு உலகமே சூன்யமாகக் காட்சி யளித்தது. முழுமதியின் போகன நிலவில்கூட அவனால் தனிமையைத்தான் காண முடிந்தது. சந்திரன் தனியாகத்தானே வான வீதியில் பவனி வந்து கொண்டிருந்தான்! அங்கொன்றும் இங்கொன்றுமாக நாணிக் கோணிக் கொண்டு நின்று சந்திரனைப் பார்த்துக் கண் சிமிட்டிக் காதல் புரியும் விண் மீன்கள்கூடத் தனிமையைத்தான் அவனுக்கு உணர்த்தின.

பெரிய மாளிகை, எழில் கொழிக்கும் நந்தவனம், கைகட்டி நிற்கும் வேலையாட்கள், நினைத்த இடத்துக்குச் செல்லுவதற்கு வாகனம், இதையெல்லாம் அநுபவிப்பதற்கு வேண்டிய மிதமிஞ்சிய செல்வம்—எல்லாம் மதுசூதனனிடம் ஒன்றாய் அமைந்திருந்தன. அப்படி யிருந்தும் தனிமை உணர்ச்சி ஏற்படுவானேன்? ஆம். அவன் மனைவி குமுதம் பிறந்த வீட்டுக்குச் சென்றிருந்தாள். அவள் இல்லாத உலகம் அவன் வரைக்கும் தனிமைதானே! ஒரு பெரிய பாலைவனத்தில் தான் மட்டும் தனியே இருப்பதாக அவனுக்குத் தோன்றியது.

மேல் மாடியிலிருந்து மதுசூதனன் தெருக்கோடி வரையில் பார்த்தான். அவன் மாளிகைக்குப் பக்கத்தில் ஒரு மண்டபம் இருந்தது. அதில் பரதேசிகளும் பண்டாரங்களும் தங்கி யிருப்பது வழக்கம். இன்றைக்கும் அங்கே யாரோ சிலர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். மதுசூதனன் அவர்களைக் கூர்ந்து கவனித்தான். அவர்களில் ஒருவன் சுவாரஸ்யமாக ஏதோ சொல்லிக் கொண்டிருந்தான். மற்றவர்கள் அவன் வாயைப் பார்த்தபடி உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். மதுசூதனனுக்கு அவனைத் தன் மாளிகைக்கு அழைத்து வந்து சற்று நேரம் பேசினால் என்ன என்று தோன்றியது. அடுத்த நிமிஷம் ஒரு ஆளை அனுப்பி அவனைத் தான் இருக்கும் மேல் மாடிக்கு வரவழைத்தான்.

அந்தப் பரதேசிக்கு வயது ஐம்பது இருக்கும். சோர்ந்து வாடி யிருந்தான். அவன் போட்டுக் கொண்டிருந்த சட்டையும் கிழிந்திருந்தது.

"ஏன் அப்பா, ரொம்பக் களைத்திருக்கிறாய்? சாப்பிடவில்லையா? இதோ முதலில் சாப்பிடு!" என்று சொல்லி மதுசூதனன் அவனுக்கு நல்ல உணவு பரிமாறச் செய்தான். அந்த மனிதன் மிகவும் ஆவலோடு ஐந்து நிமிஷத்தில் சாப்பாட்டை முடித்துக் கொண்டான்.

சாப்பாட்டை முடித்துக் கொண்டு வந்த பரதேசியைப் பார்த்து மதுசூதனன் "உன் பெயர் என்ன? உனக்கு எந்த ஊர்?" என்று கேட்டான்.

அந்த மனிதன் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்தான். பிறகு ஒரு நெடிய பெருமூச்சு விட்டான்.

"ஐயா, என் வாழ்க்கை மிகவும் துயரம் நிறைந்த வாழ்க்கை. நான் ஒரு பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவன். என் பாட்டனார் ஒரு சமஸ்தானத்தில் திவானாக இருந்தார். எங்கள் குடும்பம் தமிழ்நாட்டை விட்டு வெகு காலத்துக்கு முன்பே வடநாட்டில் குடியேறி விட்டது.

"என் இளம் பிராயத்திலேயே என் பாட்டனார் சேர்த்து வைத்த சொத்து முழுவதும் தீர்ந்துவிட்டது. சின்ன வயதில் நான் அடைந்த கல்வி மிகவும் சொற்பம். ஆனால் எனக்கு இயற்கையிலேயே, சித்திரம் தீட்டுவதில் மட்டற்ற ஆர்வம் இருந்தது. எந்தக் காட்சியைப் பார்த்தாலும் அதை அப்படியே தத்ரூபமாக எழுதி விடுவேன். நந்தவனங்களிலும் நதிதீரங்களிலும் புகை வண்டி நிலையங்களிலும் நான் பார்த்த பெண்களையும் குழந்தைகளையும் வயோதிகர்களையும் அப்படியே சித்திரமாகத் தீட்டி மகிழ்வேன்.

"இந்தச் சந்தர்ப்பத்தில்தான் எனக்கு அந்தப் பிரசித்திபெற்ற ஈழநாட்டு ஓவியரைக் காணும் அரிய சந்தர்ப்பம் கிடைத்தது. அந்தச் சைத்திரீகர் வரைந்த சித்திரங்களில் எல்லாம் உயிர் பெற்று விளங்கின. சித்திரக் கலையில் நான் கொண்டிருந்த மட்டற்ற ஆர்வம் காரணமாக என் குடும்பத்தையே துறந்து அந்த ஈழத்து ஓவியருடன் ஈழநாட்டுக்குச் சென்றேன். அவர் சித்திரக் கலையில் எனக்கு இருக்கும் ஆர்வத்தைக் கண்டு வியந்து அதன் நுணுக்கங்களையெல்லாம் சொல்லிக் கொடுத்தார்.

"அவரிடம் பழக ஆரம்பித்த சிறிது காலத்துக்குள் என் சித்திரங்களில் ஒரு புது மெருகு ஏற ஆரம்பித்தது. ஜீவகளையுடன் பாவமும் என் சித்திரங்களில் ததும்பியது. என் குருவுக்கு என்னிடம் பரம திருப்தி ஏற்பட்டது. தில்லைநாயகம் என்னும் என் பிள்ளைப் பெயரை மாற்றி 'அருமைநாயகம்' என்று அன்போடு அழைத்தார். நான் உள்ளம் பூரித்துப் போனேன். அதிலிருந்து எல்லோரும் என்னை அருமைநாயகம் என்றே அழைக்கலானார்கள். ஊம்! அதெல்லாம் ஒரு பழங் கனவாய்ப் போய்விட்டது!" என்று கூறி அருமைநாயகம் சற்று நேரம் பேச்சை நிறுத்தினான்.

மதுசூதனனுக்குக் கலைகளில் எல்லாம் ஆர்வம் அதிகம். அருமை நாயகத்தினிடம் அவனுக்கு ஒரு மரியாதை உண்டாயிற்று.

"ஐயா, பிரசித்தி பெற்ற ஓவியராகிய தாங்கள் இவ்வளவு சிரம தசைக்கு வரக் காரணம்? தொழிலில் சரியான ஆதரவு கிடைக்கவில்லையா? இல்லை, தாங்கள் சித்திரத்தில் ஆர்வம் செலுத்தவில்லையா?" என்று மிகவும் மரியாதையுடன் கேட்டான்.

மீண்டும் அருமைநாயகம் பேச ஆரம்பித்தான்:

"இல்லை, இல்லை! நான் சித்திரத்தை மிகவும் ஆர்வத்துடன் பயின்று தொழிலாகவே மேற்கொண்டேன். பெரிய பெரிய பிரபுக்களெல்லாம் என் சித்திரங்களைப் பாராட்டிப் பரிசுகள் வழங்கினார்கள். மன்னாதி மன்னர்களெல்லாம் என் சித்திரங்களைப் பார்த்து மூக்கில் விரல் வைத்து மகிழ்ந்தார்கள்......ஆனால்...... இதெல்லாம் அதிக காலம் நீடிக்கவில்லை. அதற்குக் காரணம் நான் எழுதிய சித்திரங்கள் தான்!" என்று கூறிவிட்டு அருமைநாயகம் வெண்மதி மிதக்கும் வானத்தை வெறித்துப் பார்த்தான். வெண் முகிலாகிய துகிலை விலக்கிக் கொண்டு சந்திரனும் வெளியே வந்தான்.

"என்ன! நீங்கள் எழுதிய சித்திரங்களா உங்களை அந்தத் துறையில் நீடித்து இருக்க விடவில்லை? அது எப்படி? எனக்கு விளங்கும்படியாகச் சொல்லுங்கள்!" என்றான் மதுசூதனன்.

"ஆமாம், ஐயா! நான் எழுதிய அருமையான சித்திரங்கள்தான் எனக்குச் சத்ருவாக முளைத்தன. நான் சொல்லப் போகும் விஷயத்தில் உங்களுக்கு நம்பிக்கை ஏற்படாது. ஆனால் நம்பித்தான் ஆகவேண்டும். உண்மையை நம்பாமல் என்ன செய்வது? அது மிகவும் விசித்திரமானது தான். நான் நல்ல நிலைக்கு வந்து கொண்டிருந்த சமயம் அந்த நம்பமுடியாத சம்பவம் நடந்தது. நான் ஏதாவது ஒரு படம் வரைந்தால், ஜனங்கள் அதைப் பார்த்து விட்டு ஒருவருக்கொருவர் காதோடு பேசிக் கொள்ளுவார்கள். ஒருவர் முகத்தை ஒருவர் ஆச்சரியமாகவும், ஏதோ ஒரு நூதனமான பொருளைக் கண்டுவிட்டவர் மாதிரியும் பார்த்துக் கொள்ளுவார்கள். சிலர் நான் வரைந்த படங்களைப் பார்த்துவிட்டுப் பயப்பிராந்தியுடன் பதில் ஒன்றும் பேசாமல் சென்று விடுவார்கள்.

"இதற்கெல்லாம் காரணம் முதலில் எனக்குத் தெரியவில்லை. பிறகு தெரிய வந்தது. ஒருவருடைய உருவத்தை வரைந்தால், அவருடைய முகத்தில், அவருக்குள் மறைந்து கிடக்கும் சுபாவத்தையும் குணத்தையும் காட்டிவிடும் சாமர்த்தியம் என்னிடம் இருந்தது. ஒருவருடைய முகத்தை எழுதும் போதே அவருடைய அகத்தையும் அதில் காண்பித்து விடும் அபூர்வ திறமை எனக்கு எப்படி ஏற்பட்டது என்று எனக்கே தெரியவில்லை. நான் எழுதிக் கொடுத்த சித்திரங்களை வாங்கிக் கொண்டு போனவர்கள் என்னிடம் மீண்டும் வந்து அந்தச் சித்திரங்களை எறிந்து விட்டுச் சீற்றத்துடன் ஏதேதோ பேசி விட்டுப் போனார்கள்.

"மனிதர்களின் குறைபாடுகள், அரக்க சுபாவம், பொறாமை, துரோக சிந்தை முதலிய குணங்களையெல்லாம் நான் வரைந்த சித்திரங்கள் அப்படி அப்படியே எடுத்துக் காட்டின.



"ஒரு வாலிபன் ஒரு பெண்ணை மனப்பூர்வமாகக் காதலித்தான். அவனுடைய எழில் உருவத்தை வர்ண ஓவியமாகத் தீட்டி அழகு பார்க்க விரும்பி என்னிடம் வந்தான். அவனுடைய விருப்பப்படியே அவன் கொடுத்த புகைப் படத்தைப் பார்த்து இணையற்ற வர்ண ஓவியமாக என் முழுத் திறமையையும் காட்டி வரைந்தேன். படம் வரைந்து முடிந்ததும் வாலிபன் வந்து பார்த்தான். இரண்டொரு நிமிஷங்கள் படத்தை உற்றுப் பார்த்தான். அவ்வளவுதான். 'ஹா! எனக்கு இவள் வேண்டாம்! இவளா என் இருதய ராணி! இல்லை, இல்லை! கொடிய விஷத்தைத் தன்னுள் மறைத்து வைத்துக்கொண்டிருக்கும் சர்ப்பம்! இவளது அகத்தை யறியாமல் முகத்தைப் பார்த்துக் காதலித்தேனே! என்ன பயங்கரம்!' என்று அலறிக்கொண்டு ஓடிவிட்டான். சில நாட்களுக்குப் பிறகு அந்த வாலிபன் அந்தப் பெண்ணை மணந்து கொள்ள மறுத்து விட்டதாக அறிந்தேன்.

"யாருக்குத்தான் ரகசியமாயிருக்கும் தம்முடைய அற்பத்தனத்தையும், இழிவான சுபாவத்தையும் படத்தில் நேருக்கு நேர் கண்டு ரஸிக்கப் பிடிக்கும்?

"ஒரு பெண்மணி கடல் கடந்து சென்றிருக்கும் தன் ஆசைக் கணவனின் சித்திரத்தை எழுதித் தரும்படி கேட்டாள். அதுதான் நான் கடைசித் தடவையாக எழுதிய சித்திரம். அந்தச் சித்திரத்தைப் பார்த்ததும் அந்தப் பெண்மணியின் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பெருகியது. எனக்கும் ஒன்றும் புரியவில்லை. 'பெண்ணரசி, ஏன் கண் கலங்குகிறாய்? உன் கணவர் வெளி நாட்டில் சௌக்கியமாகத்தானே இருக்கிறார்? கடிதம் வருகிறதல்லவா அவரிடமிருந்து?' என்று கேட்டேன். அவ்வளவுதான். அடுத்த நிமிஷம் அவள் கண்ணகியாக மாறிவிட்டாள். 'நான் உம்மைச் சித்திரம் வரைந்து தரும்படி கேட்டது என்னிடம் மாறாத பிரேமையுள்ள கணவரைத்தான்; என் அன்புத் தெய்வத்தைத்தான் நான் சித்திரத்தில் பார்க்க எண்ணினேன். ஆனால் உம் சித்திரத்தில் நான் பார்ப்பது என் கணவரே அல்ல; அப்பப்பா! என்ன கோர சித்தம்! உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுபவரா என் கணவர்! இத்தனை நாளும் என்னை ஏமாற்றி வந்தாரா? ஹா! ஐயோ!' என்று கதறிக்கொண்டே ஓடிவிட்டாள். பிறகு அந்தப் பெண்மணிக்குப் பைத்தியம் பிடித்து விட்டது.

"அதற்குப் பிறகு என்னிடம் சித்திரம் எழுதித் தரும்படி யாரும் கேட்கவில்லை. கடைசியில் அந்தப் பிழைப்பையே விட்டு விடும்படியாகி விட்டது. அத்துடன் நில்லாமல் சோற்றுக்கே தாளம் போடும் நிலைக்கு வந்து விட்டேன். கடைசியில்

இந்தப் பரதேசி வாழ்க்கையை மேற் கொண்டேன்!" என்று கூறி அருமை நாயகம் அமைதியாயிருந்தான்.

மதுசூதனன் சில நிமிஷங்கள் யோசனை செய்துவிட்டு, "ஐயா, தாங்கள் வரைந்த சித்திரங்களில், ஒரு சித்திரத்தில்கூட மனிதனின் நல்ல குணங்கள் வெளிப்பட வில்லையா? இல்லை, நல்ல குணமுள்ள மனிதர்களின் உருவத்தையே நீங்கள் வரையவில்லையா?" என்று கேட்டான்.

"இல்லை, இல்லை! எத்தனையோ பேர்களுடைய நற்குணங்களையும் என் சித்திரங்களின் மூலம் பலர் கண்டு களித்தார்கள். குற்றமற்ற குழந்தைகளையும் இள நங்கைகளின் எழில் உருவங்களையும் நான் வரைந்தபோது என்னைப் பாராட்டாதவர் கிடையாது. சூரியோதயத்தையும் அஸ்தமனக் காட்சியையும் நான் படமாக வரைந்தபோது பார்த்தவர்களெல்லாம் பிரமித்துப் போனார்கள். வன விருக்ஷங்களையும் மலர்ப் பொய்கைகளையும் நான் படத்தில் தீட்டியதைப் பார்த்து எத்தனையோ பேர் பரவசமடைந்தார்கள்! அந்தக் காட்சிகளில் குற்றம் ஏது, குறை ஏது? ஆனால் ஒரு ஓவியன் இயற்கைக் காட்சிகளையே வரைந்து கொண்டிருக்க முடியுமா?"

மதுசூதனன் சற்று நேரம் பேசாமல் இருந்துவிட்டு, "ஐயா, அருமை நாயகம்! இனிமேல் நீங்கள் கஷ்டப்பட வேண்டாம். உங்களுக்கு என் வீட்டில் சகல வசதிகளும் செய்து தருகிறேன். இங்கேயே தங்கியிருந்து எனக்கு ஒரு சித்திரம் எழுதித் தரவேண்டும். என்னுடன் கொஞ்சம் உள்ளே வருகிறீர்களா?" என்று கேட்டபடி மதுசூதனன் எழுந்து மாடிப்படியை நெருங்கினான். அருமை நாயகமும் அவனைத் தொடர்ந்தான்.

மதுசூதனன் தன் அறைக்குச் சென்று தன் மனைவியின் படத்தை அருமை நாயகத்துக்குக் காட்டினான்.

"சித்திரக்காரரே, இது என் மனைவி குமுதத்தின் படம். அவள் இப்பொழுது பிறந்த வீட்டுக்குப் போயிருக்கிறாள். அவளை ஒரு நிமிஷமும் பிரிந்திருக்க முடியாத எனக்கு அவளை வர்ண சித்திரத்தில் வரைந்து பார்க்க ஆசையாயிருக்கிறது. சித்திரம் தத்ரூபமாய் அமைந்துவிட்டால் அதைவிட எனக்கு வேறு ஒன்றும் வேண்டியதில்லை!" என்று கூறி மதுசூதனன் அந்தச் சித்திரக்காரனுக்கு வேண்டிய சகல சௌகரியங்களையும் தன் மாளிகையில் செய்து கொடுத்தான்.

இரண்டு வாரங்களாக விடாமல் வேலை செய்தான் அருமை நாயகம். முதல்

இரண்டொரு நாட்கள் மதுசூதனன் அவள் சித்திரம் வரைவதைப் பார்த்தான். பிறகு அந்த இடத்துக்குப் போவதற்கே அவனுக்கு அச்சமாயிருந்தது.

'மலரினும் மென்மையான உள்ளம் படைத்த என் அருமை மனைவியின் சுபாவம் நான் நினைத்துக் கொண்டிருப்பதற்கு மாறாயிருக்குமோ? அந்த உண்மையை இந்தச் சித்திரம் வெளிப்படுத்தி விடுமோ? இல்லை, இல்லை, என் குமுதம் மிக மிக உயர்ந்தவள். அந்த அபிப்பிராயத்தை ஒரு நாளும் மாற்றிக் கொள்ள மாட்டேன்!' என்று அவன் மனம் எண்ணுவதெல்லாம் எண்ணியது.

சித்திரம் முடிந்துவிட்டது. மதுசூதனன் அருமை நாயகத்துக்குத் தகுந்தபடி சன்மானம் அளித்து அனுப்பி வைத்தான். ஆனால் குமுதத்தின் சித்திரம் மாத்திரம் பட்டுத் திரைச் சீலைக்குப் பின்னால் மறைந்தே இருந்தது.

மதுசூதனனுக்கு அந்த அறைக்குப் போய்க் குமுதத்தின் படத்தைப் பார்க்கவே தைரியம் இல்லாமல் இருந்தது. அருமைநாயகம் சொன்ன உண்மைகளெல்லாம் மனத்தில் தோன்றி அவனைத் தைரியம் இல்லாதவனாகச் செய்தன. பல முறை அந்த அறை வாசல் வரையில் சென்றுவிட்டு, உள்ளே போய்ப் படத்தைப் பார்க்கத் தைரியம் இல்லாமல் அவன் திரும்பிவிட்டான். அந்த அறை வெகுநாட்களாகப் பூட்டப்பட்டே கிடந்தது. மதுசூதனனுடைய மனக்கதவும் பூட்டப்பட்டு விட்டது. ஊருக்குப் போயிருக்கும் குமுதத்தைப் பற்றியோ, அந்தச் சித்திரத்தைப் பற்றியோ அவனால் நினைக்கவே முடியவில்லை. அவன் உள்ளத்தில் அர்த்தமற்ற சந்தேகக் கறை படிந்ததன் காரணம் அவனுக்கே விளங்கவில்லை. அருமைநாயகம் சொன்ன கதையை வைத்துக் கொண்டு தான் இம்மாதிரி பீதிக்கு ஆளாகி யிருப்பதை நினைக்க அவனுக்குச் சிரிப்புத் தான் வந்தது. ஆனால் சித்திரத்தைப் பார்க்கத் தைரியம் மட்டும் வரவில்லை.

அன்று ஊரிலிருந்து மதுசூதனனுடைய அத்தை வந்தாள். அவளுக்கு மதுசூதனன் அந்தப் பெரிய அறையைப் பூட்டி வைத்திருப்பதன் காரணம் விளங்கவில்லை.

"ஏன் அப்பா, மதுசூதனா! இந்த அறையில் என்ன இருக்கிறது? ஏன் பூட்டியே வைத்திருக்கிறாய்? நான் வந்த நாளாய்ப் பார்க்கிறேன். அதைத் திறக்கவே காணோமே!" என்றாள் அத்தை.

மதுசூதனனுக்கு அத்தைக்கு எதிரில் தன் கோழைத்தனத்தைக் காட்டிக் கொள்ள விருப்பமில்லை. அறையைத் திறந்து அத்தையை உள்ளே அழைத்துக் கொண்டு போனான்.

அத்தையின் கண்களில் முதலில் பட்டது குமுதத்தின் வர்ண சித்திரம்தான். மதுசூதனன் ஜாக்கிரதையாக அதன் பக்கமே திரும்பாமல் இருந்தான்.

"மதுசூதனா, படம் ரொம்ப நன்றாயிருக்கிறதே! இதை யார் எழுதினார்கள்? குமுதத்தின் முகத்தில் மலரும் புன்சிரிப்பை அப்படியே சித்திரத்தில் கொண்டு வந்து விட்டானே! குமுதம் ஊரிலிருந்து வந்து பார்த்தால் ஆச்சரியப்பட்டுப் போவாள். ஆகா! அவளுடைய உத்தமமான குணத்துக்கு அலங்காரமாக விளங்குகிறது இந்தச் சித்திரம்!" என்றாள் அத்தை.

இதைக்கேட்ட மதுசூதனன், தன்னையும் அறியாமல் "அத்தை! நிஜமாகவா?" என்று பலமாக வெறிபிடித்தவன் மாதிரி கத்தி விட்டான்.

"என்னடாப்பா! உனக்கு உடம்புக்கு ஒன்றுமில்லையே? முகம் ஒருமாதிரி யிருக்கிறதே!" என்றாள் அத்தை.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, அத்தை!" என்றான் மதுசூதனன்.

"குமுதத்தின் குணத்தைப்பற்றி எனக்கு நன்றாய்த் தெரியும். அவள்மாதிரி சாந்தமும் புத்திசாலித்தனமும் உள்ள உத்தமி கிடைப்பது ரொம்ப அருமை. படம் ரொம்ப நன்றாய் அமைந்திருக்கிறது!" என்றாள் அத்தை.

மதுசூதனனுடைய முகத்தில் எல்லையற்ற திருப்தியும் மகிழ்ச்சியும் வெளிப்பட்டன. அத்தைக்கு மதுசூதனனுடைய போக்கு எப்படிப் புரியும்?



துண்டுக்காரர் :— என்ன இது! ஏற்கெனவே சாமான்கள் விலையெல்லாம் ஏறிக்கொண்டே வருகிறது. பொத்தான்கள்கூட இனிமேல் கிடைக்காது போலிருக்கே!

# மனம் தெளிந்தது!

எம். கே. ஸ்ரீநிவாசன்

நீலாவுக்குப் பதினேழு வயது முடிந்து விட்டது. விவரம் தெரியாத சிறுமி நீலா இப்பொழுது நாணமும் அச்சமும் மேலோங்கிய மங்கையாகி விட்டாள்.

காற்று அலையின் திக்கை மாற்றுகிறது. பருவம் வாழ்க்கைப் பாதையையே அடியோடு மாற்றி விடுகிறது.

உலகம் நேற்றையதினம் வரை நீலாவுக்கு ஒரு விளையாட்டுக் கருவியாக இருந்தது. தன் இஷ்டப்படி திரிந்து, பாடி விளையாடினாள். இன்றைக்கோ நீலாவின் தலை அவன் உத்தரவின்றி வெளியே தெரியக் கூடாது. விளையாட்டெல்லாம் மறைந்து, பொறுப்புள்ள பெண்ணாகி விட்டாள். தமாஷாகச் சிரித்துக் கொண்டிருக்கும் அவளது உதடுகளுக்குத் தடை உத்தரவு வந்து விட்டது. முன்போல் இஷ்டப்படி சிரித்துக் கொம்மாளமடிக்க முடியாது.

நீலா தன் உருவத்தை ஒரு நிலைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். 'ஆகா, எவ்வளவு வளர்ந்து விட்டேன். குழந்தையில் நான் சீக்கிரம் பெரியவளாக வேண்டும் என்று சில சமயங்களில் நினைப்பது உண்டு. ஆனால் இப்பொழுது என் உருவத்தைப் பார்த்ததும், ஏழு வயதுச் சிறுமியாக மாறவேண்டுமென்ற ஆசை என் மனதில் ஏற்படுகின்றது' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்.

நீலா நினைத்த முந்தைய நாள் எண்ணம் ஈடேறிவிட்டது. அவள் விவரம் தெரிந்த பெண்ணாகி விட்டாள். ஆனால் இப்போது சிறியவளாக வேண்டும் என்ற அவள் விருப்பம் கனவிலும் நடக்கப் போவதில்லை.

அவள் தன் அறையில் உலாவிக் கொண்டிருந்தாள். அங்கிருக்கும் ஒவ்வொரு வஸ்துவும் அவளது தனிமையை எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது.

நேற்றைய தினம் நீலாவுக்கு விவாகம் நடந்தது. இன்றையதினத்திலிருந்து அவளது புது மண வாழ்க்கை ஆரம்பமாகிறது. ஆனால் அப்பொழுது மாலை மணி ஆறுதான் இருக்கும். சில மணி நேரத்திற்குள் நட்சத்திரங்கள் பிரகாசிக்கப் போகின்றன. இரவும் நெருங்கி வந்து கொண்டிருந்தது.

நீலாவுக்குத் தன்னுடைய சக்தி யெல்லாம் கொஞ்சங் கொஞ்சமாகத் தன்னை விட்டு நீங்கிக் கொண்டிருப்பது போல் தோன்றியது. அன்றைய இரவை நினைத்தாலே அவள் உள்ளம் இனந்தெரியாத வேதனையால் தவித்தது.

நீலா தன் அறையில் படுக்கையில் உட்கார்ந்து கொண்டு தன்னைச் சுற்றி ஒரு தடவை பார்த்தாள். கடந்த பத்து வருஷங்களாக அந்த இடம் பழகின இடம் தான். புதியது இல்லை. சிவப்புப் படுதாக்கள் அந்த அறையின் ஜன்னல்களைச் சில சமயம் அலங்கரித்துக் கொண்டிருந்தன. சில சமயம் பச்சைப் படுதாக்கள் தொங்கும். அதேமாதிரிதான் படுக்கையின் மீது இருக்கும் விரிப்புகளும். நீலாவின் அக்கா நிர்மலா, அந்த அறையின், ஏன்—அந்த வீட்டின் எஜமானியாக இருந்தாள். ஒரு மாதத்துக்கு முன்புதான் நிர்மலா இவ்வுலகத்தை விட்டு நீங்கினாள். அவளுடைய அக்கா வாழ்ந்த அதே வீட்டிலே, இன்றையதினம் எஜமானியாக நீலா வந்து புகுந்தாள்.

2

நீலாவின் உடல் அவளையும் அறியாமல் நடுங்கிற்று. பத்து வருடங்களுக்கு முன்பு அந்நியன் ஒருவன் தன் அக்காளைக் கைப்பிடித்து அழைத்துச் சென்றதைப் பார்த்திருக்கிறாள். இப்பொழுது அதே அந்நியன் நீலாவை மணந்து கொண்டான். அதாவது அவள் தன் அத்திம்பேரையே மணந்து கொண்டாள். 'நீலா ராணி' என்று அவன் பத்து வருடங்களுக்கு முன்பு கூறியதும் அதன் அர்த்தமும், இப்பொழுது கூறுவதற்கும் எவ்வளவு வித்தியாசம்!

தனக்கு முன் பிறந்தவள் அத்திம்பேருடன் கல்யாணப் பந்தலில் உட்கார்ந்து மணஞ் செய்து கொண்ட விதமும், புரோகிதர்கள் மந்திரம் ஜபிக்க, அவர்கள் ஹோம குண்டத்தைச் சுற்றி வந்து, அத்திம்பேர் அவள் கழுத்தில் மாங்கல்யம் கட்டினதும் ஒரு சலனப்படக் காட்சியாய் நீலாவின் முன்பு நிழலாடியது. அவளும் பத்து வருஷங்கள் வாழ்ந்தாள். அவள் இறந்ததற்கு அடையாளமாக அவளது கண்களில் நாலு சொட்டு ஜலம் வடிந்தன. பத்து வருஷங்கள் வாழ்ந்து வந்த மரம் பட்டுப்போன இடத்தில் இப்பொழுது ஒரு சிறு கன்றை நட்டு இருக்கிறார்கள். நீலா சிந்தனை உலகத்தில் ஆழ்ந்து விட்டாள்.

சிந்தனை உலகத்தில் லயித்தபடி நீலா தன்னுடைய சிறுமிப் பருவத்திற்குத் தாண்டினாள்.

ஒரு சமயம் சிறுமி நீலாவும் அவள் தகப்பனாரும் ஒரு தெரு வழியாகப் போய்க் கொண்டிருந்தனர். அந்தத் தெருவில் ஒரு மாட்டு வண்டியொன்று சக்கரங்கள் முறிந்தும் உடைந்தும் காணப்பட்டது. அதைப் பார்த்த அவளது தகப்பனார் "இந்த வாழ்க்கையே ஒரு மாட்டு வண்டி மாதிரிதான். ஒரு அதிர்ச்சி யானது வண்டியில் போட்டிருக்கும் பலகைகளை ஒரு குலுக்குக் குலுக்கி, கலகலத்துப் போகும்படி செய்துவிடும். சக்கரத்தில் மாட்டியிருக்கும் ஆணி உடைந்து விட்டால், வண்டிச் சக்கரம் குடை கவிழ்ந்து தானும் உடைந்து வண்டிக்கும் சேதம் உண்டாக்கிவிடும்" என்று கூறினார்.

சிறுமிப் பருவத்தில் நீலாவுக்கு அதன் அர்த்தம் விளங்கவில்லை. இப்பொழுது அவளுக்குத் தன் தகப்பனாருடைய போதனையின் தத்துவம் விளங்கி விட்டது. தந்தை இறந்து விட்டார். வண்டியின் ஆணியும் உடைந்தது. சக்கரங்களுக்குச் சேதம் உண்டாகி விட்டது. அவளுடைய குடும்பமும் தெருவில் கிடக்கும் அந்த வண்டியைப்போல் கஷ்டப்பட நேர்ந்தது.

சிறுமி சுசிலா நிர்மலாவின் பெண்—புடவையைப் பிடித்து இழுக்க, நீலா சிந்தனை லோகத்திலிருந்து விழித்துக் கொண்டாள்.

நீலா தன் கூர்மையான கண்களால் சுசிலாவை நோக்கினாள். அந்தக் கபடற்ற முகம், பிரகாசிக்கின்ற கண்கள், பட்டுப் போன்ற தலைமயிர் நீலாவைப் பெரிதும் வசிகரித்து விட்டன. சுசிலாவை வாரி எடுத்துத் தன் மடிமீது கிடத்தி உச்சி மோந்து முத்தமிட்டாள்.

நேற்றைய தினம் வரையில் நீலா சுசிலாவுக்குச் சித்தியாக இருந்தாள்.

இன்றைய தினம் முதற் கொண்டு நீலா அவளுக்கு மாற்றாந்தாய்!

"சித்தி, அம்மா எங்கே? நீ வருகிற பொழுது அவளை ஏன் அழைத்துக்கொண்டு வரவில்லை?" என்று சுசிலா கேட்டாள்.

நீலா குமுறிக் கொண்டு வரும் சோகத்தை அடக்கிக் கொண்டாள்.

சுசிலா தன் இறந்து போன தாயாரின் வரவைத் தினமும் எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். சுசிலாவுக்கு நீலாவைத் தான் சித்தி என்று அழைப்பதன் உள் அர்த்தம் தெரியுமா? குழந்தைதானே? அதற்கு எப்படித் தெரியப் போகிறது?

'நீலா எப்பொழுதுமே சுசிலாவுக்குச் சாதாரண சித்திதான். உள் அர்த்தம் கொண்ட 'மாற்றாந் தாய்' என்ற சித்தி இல்லை' என்று தன் மனசுக்குள் சொல்லிக் கொண்டாள் நீலா.

அடுத்தகணம் சுசிலா கேட்ட கேள்விக்குப் பதில் கொடுக்காமல், "கண்மணி சுசி! நீ போய் ராஜத்துடன் சமத்தாக விளையாடு" என்றாள் நீலா.

"இல்லை, சித்தி! நான் மாட்டேன். நீ முதலில் அம்மா நாளைக்கு வருவாளா, சொல்லு" என்று பிடிவாதம் பிடித்தாள்.

"நீ சமத்தாக இருந்தால் அம்மா வருவாள். ராஜத்துடன் சண்டை போடாமல் அவளை அடிக்காமல் விளையாட வேண்டும்!" என்றாள் நீலா.

தன் சித்தியைக் கட்டி அணைத்து ஒரு முத்தம் கொடுத்து விட்டு, சுசிலா தன் தோழி ராஜத்துடன் தோட்டத்துக்கு விளையாடச் சென்றாள்.

## 3

நீலாவின் கண்கள் தன் அறையில் இருந்த ஒரு படத்தை நாடின. ஆனால் அது என்ன படம் என்று அவளால் பார்க்க முடியவில்லை. அவள் கண்கள் தான் பார்க்கும் சக்தியை இழந்து விட்டனவோ? இல்லை, இல்லை! சில விநாடிகளில், அந்தப் படம் மறைந்து அதில் வேறொரு காட்சி தோன்றியது.

ஸ்மசானத்தில் தன் அக்காவின் பூத உடல் எரிந்து கொண்டிருந்தது. நீலாவின் கண்களில் வெள்ளமெனக் கண்ணீர் ததும்பிக் கொண்டிருந்தது. ஆனால் அத்திம்பேருடைய கண்களில் நான்கு சொட்டு ஜலம்தான் வந்தது. ஆண் இருதயம் இரும்போ?

அடுத்தகணம் காட்சி மாறியது. அதாவது அவளுடைய அக்கா நிர்மலாவின் உருவப் படம் இப்பொழுது அவள் கண்களுக்கு நன்றாய்த் தெரிந்தது.

அக்கா இறந்தபோது அவள் கண்ட காட்சி இப்போது அவள் மனக்கண்ணெதிரே வந்திருக்கிறது.

நிர்மலா இறந்த பிறகு, ஒரு மாதம் கழித்து நடந்தது என்ன? வனப்பாக வளர்ந்திருக்கும் நீலா அத்திம்பேருக்கு இரண்டாம் தாரம் ஆனாள். காலில் மெட்டி, கழுத்தில் திருமங்கல்யம், நெற்றியில் குங்குமம் இவைகள் நீலாவைக் கன்னி உலகத்திலிருந்து கரையேற்றி விட்டன. நீலா தன் கண்களை இறுக மூடிக் கொண்டாள். பத்து ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த சம்பவம் ஒன்று

அவள் மூடிய கண்களுக்கு மறுபடியும் புலனாயின.

சிறுமி நீலா, அவள் தாய் தந்தையர், அக்கா நிர்மலா—எல்லோரும் ஒரு சிறு வீட்டில் வசித்து வந்தனர். ஒருநாள் என்றைக்கும் இல்லாத கூட்டம். வீட்டில் பாண்டும் மேளமும் அமர்க்களமாயிருந்தது. ஊர்வலம் நிர்மலாவின் கல்யாணத்தில் தலை சிறந்து விளங்கிற்று. எவ்வளவு அழகாய் அப்பொழுது நிர்மலா விளங்கினாள்! தித்திப்புப் பண்டங்கள், கற்கண்டு, வாழைப் பழங்கள், வெற்றிலைப் பாக்கு எல்லாம் விருந்தினர்களுக்கு வழங்கப்பட்டன.

அம்மா நீலாவிடம், "நீலா! இதோ பார் அத்திம்பேர்! அவருடன் போ!" என்று கூறினாள்.

அத்திம்பேர் இரண்டு கைகளையும் விரித்து, "வா, நீலா ராணி! நாம் இருவரும் சினிமாவுக்குப் போவோம். நிறைய விளையாட்டுச் சாமான்கள் வாங்கிக் கொடுக்கிறேன்!" என்றார். நீலா மூலையில் சற்று பயத்துடன் நின்று கொண்டிருந்தாள்.

நிர்மலா தன் கண்களைத் துடைத்துக் கொண்டு புக்ககம் போக வண்டியில் ஏறினாள். அவளும் சென்றாள். நிர்மலா சில நாட்கள் கழித்து வந்த பொழுது எவ்வளவு வனப்பாகவும் அழகாகவும் உயர்ந்த நகை நட்டுகளுடன் வந்திருந்தாள்! பெரிய மகாராணி போல் இருந்தாள். அவளுடன் அத்திம்பேரும் வந்திருந்தார்.

நீலா தன் கண்களைத் திறந்தாள். சுவர்க் கோழியின் சத்தம் கேட்கத் தொடங்கியது. இரவும் வந்து விட்டது. நக்ஷத்திரங்களும் ஆகாயத்தில் பிரகாசிக்கத் தொடங்கி விட்டன. அன்றைய இரவுதான் நீலா தன் கணவனை முதலாவதாகத் தனிமையில் சந்திக்கப் போகிறாள். தனது பழைய நினைவுகளையும் அதனால் ஏற்பட்ட கலக்கத்தையும் மறக்கத் தொடங்கினாள். அழகான தன் முகத்தையும் தலை மயிரையும் கண்ணாடியில் பார்த்துச் சரிப்படுத்திக் கொண்டாள்.

அப்போது கண்ணாடியில் நிர்மலாவின் உருவம் தோன்றி மறைந்தது போல் இருந்தது. அவள் இறக்கும்போது நீலாவிடம் கூறிய வார்த்தைகள் அவள் செவியில் ரீங்காரம் செய்தன:

"நான் உன் கல்யாணத்தைப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. நம் தந்தையும் இறந்தார் நான் ஒரு பெரிய அபாக்யவதி!"

பின்னால் ஒரு உருவம் வந்து நீலாவின் கைகளைப் பிடித்து, அவளை அணைத்துக் கொண்டது. இப்போது நீலா நடுங்கவில்லை. ஏன்? இப்பொழுது அவள் பொறுப்புள்ள ஒரு மங்கை ஆகிவிட்டாள்.

# பாஸ்கரனின் படகு

கஸ்தூரி

**பா**ஸ்கரன் மராமத்து இலாக்காவிலே நீர்ப்பாசனக் கால்வாய்களைச் சீர்திருத்தி ஒழுங்குபடுத்தும் ஓவர்ஸியராக இருந்தான். இரண்டு வருஷ காலமாக அந்த வேலையைப் பார்க்கிறான். மூக்கணாங் கயிறு போடப் படாத (கலியாணமாகாத) காளைதான் அவன்! அப்பா, அம்மா இரண்டு பேர் இருந்தும் அவனைத் தண்ணீர் தெளித்து விட்டு வைத்திருந்தது சற்று வியக்கத் தக்க விஷயம்தான். பதினொரு சகோதர சகோதரிகளுக்கு இடையில் உதித்த அவனைப் பற்றி அவன் தந்தை சற்று அசட்டையாகத்தான் இருந்தார். சின்ன வயதிலிருந்தே 'பரபுத்தி விநாசாயா' என்ற நீதி மொழியை நினைவுபடுத்தி வந்தான் பாஸ்கரன். சொல்லுக்கு அடங்காப் பிள்ளையாகத் திரிந்த அவனுக்குப் படிப்பு மட்டும் ஏறிக்கொண்டிருந்தது. அது முடிந்ததும் நல்ல வேலையும் கிடைத்து விடவே, 'பூர்ண சுதந்திரம்' பெற்று விட்டான். 'காதல் செய்யாமல் கல்யாணம் செய்து கொள்வது படிக்காமல் பரீக்ஷை எழுதுவதைப் போன்றது' என்பது அவன் அபிப்பிராயம். அந்த அப்பாவிக் காதல் இத்தனை நாள் அவனை அஞ்சிக்கிடந்தது. அதற்கு உணர்வு மூட்டி விழிக்கச் செய்தாள் கமலா.

'பௌர்ணமிப் பயித்தியம்' என்று பாஸ்கரனுக்கு அவன் நண்பர்கள் நாமகரணம் செய்திருந்தார்கள். ஒவ்வொரு பௌர்ணமியையும் தவறாமல் கவனமாக வரவேற்பான் அவன். அந்த உதய சந்திரனின் வருகையை ரஸிப்பதிலே அவனுக்கு அளவற்ற ஆனந்தம்.

முகாம் நாட்களிலே அந்தப் படகுதான் அவன் வாசஸ்தலம். அது அவனுக்கென்று அளிக்கப்பட்டிருந்த பிரத்தியேகப் படகு. அதை மூன்று பாகமாகத் தடுத்து ஒரு மூலை சமையல் அறை; மற்றொரு மூலை படுக்கை அறை; நடுவில் சாமான் அறையாகச் செய்திருந்தனர். படகின் இரு பக்கங்களிலும் பெரிய ஜன்னல்கள் கதவுகளுடன் வரிசையாக அமைக்கப் பட்டிருந்தன.

அந்த 'பக்கிங்ஹாம்' கால்வாயின் ஓரங்களிலே இருந்த ஊர்களிலேயே அவனுக்குப் போகவேண்டி இருந்ததினால், படகிலேயே சுகமாகப் பிரயாணம் செய்து வந்தான். இரு புறமும் அடர்ந்திருந்த பலவித மரங்களின் குளிர்ந்த நிழலிலே படகைக் கட்டி நிறுத்திப் பனையூரிலே முகாம் போட்டிருந்தான் பாஸ்கரன். அதற்குப் 'பனையூர்' என்பதைவிட 'தென்னையூர்' என்று பெயரிட்டிருக்கலாம். ஒவ்வொரு அடர்ந்த தென்னைச் சோலைக் கிடையேயும் ஒரு குடிசையோ அல்லது வீடோ இருக்கும். வீதி என்று குறிப்பிட அங்கே ஒரு இடமும் கிடையாது. பெரும்பாலும் குடிசைகளே நிறைந்த அந்தப் பிரதேசத்திலே கனக சுந்தரத்தின் கல் வீடு ஒன்றுதான் கம்பீரமாகக் காட்சி அளித்தது. பாஸ்கரனின் படகு விட்டிருந்த இடத்திலிருந்து ஒரு மைல் தூரத்தில் கடற்கரை இருந்தது. அந்தப் பூரண சந்திரோதயத்தைக் கடற்கரையில் கண்டு களிக்க விரும்பினான் அவன். அதன்படி மாலை ஐந்து மணிக்குக் கடற்கரையை அடைந்த அவனுக்கு வியப்பூட்டத்தக்க காட்சி ஒன்று காத்திருந்தது!

முதலில் அவன் கண்களுக்கு அலைகளுடன் விளையாடிக் கொண்டிருக்கும் கருங் கூந்தல் தலைகள் நான்கு தெரிந்தன. அடுத்த நிமிஷம் நான்கு முகங்கள் தெரிந்தன. அதில் மூன்று நீலோத்பலம் போலவும், ஒன்று செந்தாமரை போலவும் இருப்பதாகப் பாஸ்கரனின் மனம் உவமை கூறிக் கொண்டது.

**சீ**ற்றுத் தூரத்திலே உட்கார்ந்த அவன் கடமைக்காகக் கையிலிருந்த புஸ்தகத்தைப் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தானே தவிர, கண்கள் என்னமோ 'தாமரை மலரை'த்தான் வட்டமிட்டுக்கொண்டிருந்தன.

'அந்த அலைகள் அவளை அடித்துக் கொண்டுதான் சற்று தூரம் போகக் கூடாதா? ஓடிப் போய் அவளைக் காப்பாற்றி விடலாமே! ஊஹூம்! அதெல்லாம் கதைகளில்தான்! உண்மையில் ஒருத்தியாகிலும் அதுபோல் விழுந்து தொலைப்பதில்லை!' என்று எண்ணமிட்டுக் கொண்டே உட்கார்ந்திருந்தான் பாஸ்கரன். நேரம் போய்க்கொண்டே இருந்தது. தூண்டில் போட்டுவிட்டு உட்கார்ந்திருப்பவனைப் போல் காத்திருந்தான் பாஸ்கரன்.

அந்தப் பெண்கள் தங்களுக்குள் என்னவோ பேசுவதும் 'கலகல' வென்று சிரிப்பதுமாகவே இருந்தனர். தன்னைத்தான் பரிகசிக்கிறார்களோ என்ற எண்ணம் தானாகவே எழுந்தது பாஸ்கரனுக்கு. சிரமப்பட்டுக் காதுகளைத் தீட்டிக் கொண்டு அவர்கள் பேசுவதைக் கவனிக்கலானான். காற்றும் சற்று வாட்டமாக வீசவே அவர்கள் பேச்சு அவனுக்கு நன்றாகக் கேட்டது. ஆனால் அவர்கள் பேச்சு சுத்தத் தெலுங்காக இருந்தது. நெல்லூர் ஜில்லாவிலே சிறிது காலம் சுற்றிக் கொண்டிருந்த அவனுக்கு அது சுலபமாகப் புரிந்தது. அதன் மொழி பெயர்ப்பு: "இது என்னடி தொல்லையாய்ப் போச்சு! இவன் எங்கிருந்து வந்து தொலைந்தான் இந்த நேரத்திலே! கல்லுப் பிள்ளையார்போல் உட்கார்ந்திருக்கும் இவன் முன்னால் நாம் ஜலக்கிரீடை செய்து கொண்டிருப்பதை யாராகிலும் பார்த்துத் தொலைத்தால் என்ன செய்வது?" என்று வேதனைப் பட்டாள் ஒருத்தி.

"பார்க்கட்டுமே! இன்றைக்கென்று இவன் வந்து இங்கே யோகாசனம் போட்டுக் கொள்வான் என்று நமக்கு ஜோசியம் தெரியுமா?" என்றாள் இன்னொருத்தி.

"அது கிடக்கட்டும்; இவன் என்றைக்கு எழுந்து போக உத்தேசித்திருக்கிறானோ, தெரியவில்லையே!"

"இடிச்ச புளிமாதிரி இப்படி அப்படி அசையாமல் உட்கார்ந்திருக்கிறானே!"

"உஷ்! மெல்லப் பேசுங்களேன். அவன் காதில் விழுந்து வைக்கப் போகிறது." இது 'தாமரை முக'த்தாளின் எச்சரிக்கை.

"விழட்டுமே!"

"என்னாயிருக்கிறதடி உங்கள் பேச்சு? கடற்கரையை நாமே விலைக்கு வாங்கி விட்டதாக நினைத்து விட்டீர்களோ? நமக்கு இங்கே குளிக்க எத்தனை உரிமை உண்டோ, அத்தனை உரிமை அவனுக்கு உட்கார்ந்திருக்கவும் உண்டு!" என்று அழுத்தமாகச் சொன்னாள் அந்தத் தாமரை முகத்தாள். ஒரு முறை அவளை நன்றி பொங்கப் பார்த்த பாஸ்கரன். அடுத்த கணம் பழையபடி புஸ்தகத்திலே கவிழ்ந்து கொண்டான்.

"பெண்கள் குளிக்கும்போது எதிரே உட்கார்ந்து இளிக்க எந்தச் சட்டம் இடம் கொடுத்திருக்கோ தெரியவில்லை."

"அது கிடக்கட்டும், ஊர் பேர் தெரியாத இந்த உம்மணாமூஞ்சிக்கு நம்ம கமலா ஏன் பரிந்து பேசுகிறாள்?"

"போதுமடி! என்னை வேறு சந்திக்கிழுக்காதீர்கள். இந்த அரட்டையை மூட்டை கட்டிவிட்டு, வீடு போய்ச் சேரும் வழியை யோசியுங்கள்" என்றாள் கமலா கோபத்துடன்.

"வேறு வழி என்ன இருக்கிறது யோசிப்பதற்கு? மகானுபாவன் என்றைக்கு எழுந்து போகப் போகிறாரோ அன்றைக்குத் தான் நாமும் கரையேற முடியும்."

"இங்கு உடையை மாற்ற மறைவிடமேயில்லை; இவனும் அசைகிற வழியாக



# யுக்தி பலித்தது !



ஜெனரல் ரிட்ஜ்வே

இரண்டாவது உலக மகாயுத்தம் மும்முரமாக நடந்து கொண்டிருந்தபோது ஜெனரல் ரிட்ஜ்வேயும் மற்றொரு இராணுவ அதிகாரியும் போர்முனைக்கு அப்பால் தொலைவில் ஏதோ இரகசியத் திட்டம் வகுத்துக் கொண்டிருந்தனர். அந்தச் சமயத்தில் திடீரென்று ஒரு பெரிய ஜெர்மன் டாங்கி அவர்களுக்குப் பின்புறமாக வந்து விட்டது. அதைக் கண்ட அதிகாரி திகிலடைந்து அருகில் இருந்த ஒரு பள்ளத்தில் போய் ஒளிந்து கொண்டார். ஆனால் ரிட்ஜ்வே அந்த ஆபத்தான நிலைமையிலும் சிறிதும் கலங்காமல் தம்முடைய துப்பாக்கியால் அந்த டாங்கியை நோக்கிச் சுட்டார். தனிமையில் ஒருவர் டாங்கியை நோக்கிச் சுடுவதற்கும் பெரிய மலைப்பாறையில் மண்டையை மோதிக்கொள்வதற்கும் வேற்றுமை எதுவும் இல்லை. ஆனாலும் ரிட்ஜ்வேயின் யுக்தி பலித்தது! தனியாக இருக்கும் ஓர் இராணுவ அதிகாரி டாங்கியை நோக்கிச் சுட வேண்டுமானால், அருகில் அவருக்கு அபரிமிதமாகப் பக்கபலம் இருக்க வேண்டும் என்று நினைத்து டாங்கி ஓட்டம் பிடித்தது! அஞ்சா நெஞ்சமும் தந்திரமும் வாய்ந்த இந்த ஜெனரல் ரிட்ஜ்வேதான் பதவியிலிருந்து விலக்கப்பட்ட ஜெனரல் மெக் ஆர்தர் ஸ்தானத்தில் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

★

# பெரும் நஷ்டம்



ஸ்ரீ பெவின்

தமது வாழ்நாளில் பள்ளிக்கூடத்துக்கே சென்று அறியாத எர்னஸ்ட் பெவின் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலேயே இரண்டு மாபெரும் பதவிகளைத் திறம்பட வகித்து உலகப் பிரசித்தி பெற்றார் என்றால் எவ்வளவு ஆச்சரியமான விஷயம்! பெவின் பிறப்பதற்கு முந்தியே அவரது தந்தை காலமானார். பெவின் தம்முடைய ஆறாவது வயதில் தாயாரையும் இழந்தார். இவ்வாறாக இந்த உலகில் அநாதையாக விடப்பட்ட பெவின் பத்தாவது வயதிலேயே வயிற்றுப் பிழைப்புக்கு வழிதேடும் படியான விதிக்கு இலக்கானார். ஹோட்டல் சிறுவனாகவும் கையாளாகவும் வேலை பார்த்த பெவின் உறுதியினாலும் ஒப்பற்ற திறமையினாலும் பிரிட்டிஷ் தொழிலாளர் சங்க மகாசபைக்குத் தலைவராகவும் பிரிட்டிஷ் அரசாங்கத்தில் மிகப் பொறுப்பு வாய்ந்த வெளிநாட்டு மந்திரியாகவும் வந்தார். அரசாங்கத்துக்கு உள்ளேயும் வெளியிலும் ஓர் ஆங்கிலேயர் வகிக்கக்கூடிய பெரும் பதவி அந்த இரண்டைத் தவிர வேறு இல்லை எனலாம். அமெரிக்காவின் இழுத்த இழுப்புக்கு இணங்க மறுத்துச் சீன சர்க்காரை அங்கீகரித்தது பெவினின் திறமைக்கும் தீர்க்க தரிசனத்துக்கும் உதாரணமாகும். ஒரு வாரத்துக்கு முன் இங்கிலாந்தில் காலமான பெவினின் திறமையைச் சர்ச்சில், ஆட்லி முதலானோர் பாராட்டினார்கள். அவரது மரணம் பிரிட்டனுக்குப் பெரும் நஷ்டம் என்று வருந்தினார்கள்.

இல்லை. எழுந்திருங்கள் ஈர உடையுடனே நடக்கலாம்."

"காலை அரை அடி ஆழம் இழுக்கும் இந்த மணலிலே, தண்ணீர் சொட்டும் உடையுடன் ஒரு மைல் நடக்க யாரால் முடியும்?"

பாஸ்கரன் தலையை நிமிர்த்தி வானத்தைப் பார்த்தான். பூரணச் சந்திரன் உதயமாகி அதிக நேரமாகி விட்டிருந்தது. "அடாடா! வந்த வேலையை மறந்து, இந்த வாயாடிகளின் வசை புராணம் கேட்டுக் கொண்டு உட்கார்ந்து விட்டோமே!" என்று நினைத்த படியே எழுந்த பாஸ்கரன் திரும்பிப் பாராமல் நடக்கலானான்.

"ஐயையோ! நாம் பேசியதை யெல்லாம் கேட்டு விட்டாரோ என்னமோ?" என்று பதைத்த கமலாவின் குரல் அவனுக்கு மிகத் தெளிவாகக் கேட்டது.

'பட்டணத்துப் பெண்களுக்குத்தான் பயம் என்பது கிடையாது; அதனால் அவர்கள் அடித்துப் பேசுவார்கள். கிராமியப் பெண்கள் பயந்த சுபாவமுடையவர்கள்; அதனால் அடக்க ஒடுக்கமாக இருப்பார்கள்' என்று பாஸ்கரன் நேற்று வரை நினைத்திருந்தான். இன்று அவர்களே ஒரு விதத்தில் தேவலை என்று தோன்றியது. அதே விநாடி கமலாவின் நாணம், நர்த்தனம் புரியும் விழிகள் எல்லாம் ஞாபகத்திற்கு வந்தன. மற்ற பெண்களைப் போல் அவள் பேசவில்லை. 'பெண்கள்' என்று எல்லோரையும் ஒன்றாக மதிப்பதற்கில்லை. ஒருத்தி தெய்வமாக இருந்தால், ஒருத்தி சாதாரணப் பெண்ணாக இருக்கிறாள்! இதய தீபத்திற்கு ஒருத்தி தூண்டுகோலாயிருந்தால், ஒருத்தி விட்டிலாக இருக்கிறாள்!

எத்தனையோ பெரியவர்கள் பெண்ணைப் பற்றி ஆராயப் புகுந்து கடைசியில் விவரிக்க முடியாத புதிரென விட்டுவிட்டார்கள். நாம் ஏன் இந்த ஆராய்ச்சியில் இறங்க வேண்டும் என்று எண்ணியபடி தன் படகை அடைந்தான். ஆனால் அவமானம் என்ற வாள் அவன் உள்ளத்தை அறுத்துக் கொண்டிருந்தது. ஜன்னல் அருகே நின்ற அவன் கண்ணுக்கெட்டிய தூரம் வரை பரந்து கிடந்த மணற்பரப்பைப் பார்த்துக் கொண்டிருந்தான். தூரத்தில் அந்தப் பெண்கள் வருவது தெரிந்தது. படீரென்று கதவை சாத்திவிட்டு 'தொப்'பென்று சாய்மான நாற்காலியில் சாய்ந்தான் பாஸ்கரன்.

*

உல்லாசமாக பேசிச் சிரித்துக்கொண்டு வந்த அந்தப் பெண்கள் 'பக்கிங்ஹாம்' கால்வாய்க் கழியை அடைந்ததும் பயந்து போனார்கள். அவர்கள் போகும் போது முழங்காலளவு இருந்த தண்ணீர் இப்போது இடுப்பிற்கு மேல் இருக்கும் போலிருந்தது. பொழுது போனால் தண்ணீர் அதிகமாகும் விஷயம் அவர்களுக்குத் தெரிந்ததுதான். என்றாலும் இன்றைக்கு அதிக நேரமாகி விட்டதினால் தண்ணீரும் அதிகமாகி விட்டது. "என்னடி செய்வது?" "எப்படிப் போவது?" "அந்த நடியன் வந்து உட்கார்ந்திருந்ததினால் இன்றைக்கு நேரமாகிவிட்டது" என்றெல்லாம் பேசிக் கொண்டார்கள். எப்படிப் போகப் போகிறார்கள் பார்க்கலாம் என்று தனக்குள் கருவிக் கொண்டே பாஸ்கரன் ஜன்னலை மெள்ளத் திறந்து சிறு இடைவெளி வழியாக மறைந்திருந்து பார்த்தான்.

"ஓவர்சியர் படகு எதிர்க் கரையில் இருக்கிறது. அதைத் திருப்பும்படிக் கேட்டுக் கொண்டால்தான் அக்கரையை அடைய முடியும்" என்று கமலா மெள்ளக் கூறினாள்.

படகில் இருப்பவர்களை எப்படிக் கூப்பிடுவது என்று தெரியாமல் தவித்தார்கள். அந்த நேரம் பார்த்துச் சமையற்கார சங்கர நாயர் உருளைக் கிழங்குத் தோலை வெளியே எறிவதற்காக ஜன்னலருகில் வந்தான்.

"இந்தாப்பா! இங்கே பாரு" என்றாள் கமலாவின் தோழி ஒருத்தி. வியப்படைந்த சங்கரன் அவிழ்ந்த கூந்தலுடன் நிற்கும் அந்த நால்வரையும் திறந்த வாய் மூடாமல் பார்த்தான்.

"நாங்கள் அந்தக் கரைக்குப் போக வேணும். கொஞ்சம் அந்தப் படகைத் திருப்ப முடியுமா?" என்றாள் அந்தப் பெண்.

"இருங்க. ஐயாவைக் கேட்டுக் கொண்டு வரேன்" என்று சங்கரன் பரபரப்பாகப் பாஸ்கரனிடம் வந்தான். ஒன்றும் அறியாதவன் போல் நின்றிருந்த அவனிடம் "யாரோ பாவம்! நாலு பெண்கள் அக்கரையிலே நிற்கிறார்கள். கால்வாயிலே வெள்ளம் வந்துவிட்டது. நம்ம படகைக் கொஞ்சம் திருப்பச் சொல்லுகிறார்கள்" என்று அடக்கமாகச் சொன்னான்.

"இங்கே எவனும் வேலை வெட்டி இல்லாமே உட்கார்ந்திருக்கவில்லை. படகைத் திருப்ப முடியாது என்று சொல்லிவிட்டு நீ உன் வேலையைக் கவனி" என்று எரிந்து விழுந்தான் பாஸ்கரன்.

ஒரு காரணமில்லாமல் இந்தச் சிறு விஷயத்திற்கு இப்படி எரிந்து விழுகிறாரே என்றெண்ணிய சங்கரன், தன் ஜன்னலருகே வந்து "ஐயா கோவிச்சுக்கிறார், நான் என்ன செய்ய முடியும்?" என்றான். அவர்கள் நின்ற நிலை அவனுக்கே பரிதாபமாக இருந்தது.

"இரவு வேளையிலே இக் கரையிலே பெண்கள் தவிக்கிறோம். சும்மா இருக்கும் படகைச் சற்று குறுக்கே திருப்பி நிறுத்தினால் உங்க ஐயாவுக்கு என்ன தேய்ந்து விடும்? அவரைச் சற்று வெளியே தலையைக் காட்டச் சொல்லு. நாங்களே கேட்டுப் பார்க்கிறோம்."

"இது என்ன வம்பாக இருக்கிறதே! நான் இப்போ வெளியே தலையை நீட்டினது வம்பாகப் போச்சு" என்று தவித்துக் கொண்டே சங்கரன் மறுபடியும் பாஸ்கரன் எதிரே போய் நின்றான்.

வெளியே பேசும் ஒவ்வொரு வார்த்தையையும் கேட்டுக் கொண்டிருந்த பாஸ்கரன் சங்கரன் வந்து நின்றதைக் கவனியாதவன் போல் நடித்தான். "நான் சொன்னால் கேட்கமாட்டேன் என்கிறார்கள். தங்களிடம் நேரில் கேட்க வேண்டுமாம்" என்றான் சங்கரன்.

சிரித்துக் கொண்டே எழுந்த பாஸ்கரன் ஜன்னலைத் திறந்தான். விளக்கின் ஒளியிலே தெரிந்த பாஸ்கரனின் முகத்தைக் கண்டு அந்த நால்வரும் துணுக்குற்றனர். ஒருவரை ஒருவர் பார்த்து விழித்தனர்.

"கடற்கரையைத் தான் விலைக்கு வாங்கி விட்டீர்கள் என்று பார்த்தால் கால்வாய்க் கரையையும் வாங்க வந்து விட்டீர்களே" என்று ஏளனமாகக் கேட்டான் பாஸ்கரன்.

"அப்படியானால் நீங்கள் இதை விற்க மாட்டீர்கள் போலிருக்கிறது?"

"பரிகாசமிருக்கட்டும். இந்தக் கால்வாயை விற்க உரிமையில்லாவிட்டாலும்,



குட்டித் தவளை :—மாமா, இன்றைக்கு மழை பெய்திருக்கிறதே! முறை வைக்கலாமா என்று அப்பா உங்களைக் கேட்டுக் கொண்டு வரச் சொன்னார்!

பெரிய தவளை :—மழையினாலே எனக்குத் தொண்டையைக் கட்டிக் கொண்டிருக்கிறது. இன்னொரு நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம் என்று சொல்லி விடு!

இதில் தங்கி இருக்கவாகிலும் எனக்கு உரிமையுண்டு" என்றான் பாஸ்கரன்.

"படகைச் சற்று குறுக்கே திருப்பினால் இந்தப் பக்கம் ஏறி அந்தப் பக்கம் இறங்கி விடுகிறோம்" என்றாள் கமலா.

"அது தான் முடியாது என்று சொல்லியாயிற்றே!" என்றான் கிர்தாட்சண்யமாக.

"அப்படிச் சொல்லி விட்டால், நாங்கள் எப்படிப் போவது?"

"நன்றாக இருக்கிறது, உங்கள் கேள்வி! நான் உங்களை வீட்டில் சேர்ப்பதாக எப்போதாகிலும் வாக்குக் கொடுத்திருக்கிறேனா?"

"வாக்குக் கொடுத்தால் தானா? பெண்கள் ஒரு ஆபத்தில் உதவி கோரினால் மறுப்பது உம் போன்றவர்களுக்கு அழகாக இல்லை."

"விகாரமாகத் தான் இருந்து விட்டுப் போகட்டுமே. அதைப் பற்றிய கவலை தங்களுக்கு எதற்கு?"

"உங்களால்தானே எங்களுக்கு கோமா வித்து?" என்று குற்றம் சாட்டினாள் கமலா.

"போனால் போகிறதென்று எழுந்து வந்தேனே, அது என்மேல் தப்புதான். உங்களாலேயே இன்று என் அமைதி குலைந்தது. நீங்கள் இல்லாவிட்டால் ஏகாந்த இனிமையைக் அனுபவித்துவிட்டு இரவு பத்து மணிக்குக் கடற்கரையை விட்டு எழுந்து வந்திருப்பேன்" என்றான் பாஸ்கரன்.

"போகிறது. சும்மா கிடக்கும் படகைச் சற்றுத் திரும்பினால் தேய்ந்தா போய்விடும்?"

"கல்லுப் பிள்ளையாரானாலும் இடிச்ச புளியானாலும் படகைத் திருப்ப முடியுமா?"

"உங்களுக்குத் தெலுங்குகூடத் தெரியுமா?" என்று வியப்புடன் கேட்டாள் கமலா.

"இந்த 'உம்மணா மூஞ்சி'க்குத் தெலுங்கும் தெரியும், யோகாசனத்தில் இருந்தாலும் காதும் நன்றாகக் கேட்கும்."

"மன்னிக்க வேண்டும். யாரோ காவாலிப்பயல் வெட்டிக்கு வந்து உட்கார்ந்திருக்கிறானென்றும் என்று பேசி விட்டோம்."

"பார்த்தீர்களா? மறுபடியும் காவாலிப் பயல் என்ற பட்டம் வேறு கொடுத்து விட்டீர்களே!" என்றான் பாஸ்கரன்.

"சரியாய்ப் போச்சு!" என்று கமலா அலுத்துக் கொள்வதற்கும் எதிர்க்கரையிலிருந்து "கமலா" என்ற கனத்த குரல் ஒலிப்பதற்கும் சரியாக இருந்தது. அது கனகசுந்தர முதலியாரின் குரல் என்று பாஸ்கரனுக்கு நன்றாகத் தெரியும். "அதோ அப்பாவே ஆட்களோடு நம்மைத் தேடிக் கொண்டு வந்துவிட்டார்" என்று உற்சாகமாகக் கூறினாள் கமலா.

அந்தப் பக்கத்து ஜன்னல்களையெல்லாம் சாத்தி வைத்திருந்ததினால் பாஸ்கரன் நின்று பேசிக் கொண்டிருந்ததைக் கனகசுந்தரம் அறிய முடியவில்லை. "ஐயா! ஐயா!" என்றார் படகின் அருகில் வந்து.

"யார்? ஓ, முதலியார்வாளா? ஏது இப்படி இந்த வேளையில்?"

"நம்ம குழந்தை கடலுக்குப் போச்சு. இவ்வளவு நேரமாகியும் வராமல் போகவே தேடிக் கொண்டு வந்தேன். சங்கரனைப் படகைச் சற்றுத் திருப்பச் சொல்லுங்கள். அக்கரையிலே குழந்தைகள் நின்று கிட்டிருக்கு" என்றார்.

"டேய், சங்கரா! சீக்கிரம் இறங்கிப் படகைத் திருப்பு" என்றான் பாஸ்கரன்.

தனக்குள் சிரித்துக்கொண்ட சங்கரன் படகைத் திருப்பினான்.

பாஸ்கரனுக்கு இந்தப் பெண், தான் படகைத் திருப்ப மறுத்து விட்டதைச் சொல்லி விடுமோ என்று பயம்தான்.

"எம்மா! நம்ம ஒவர்ஸியர் ஐயா, படகு தான் நின்னு கிட்டிருக்கே! திருப்பச் சொல்லி வந்திருக்கக் கூடாது. அசட்டுப் பெண் அம்மா நீ!" என்று செல்லமாகக் கடிந்து கொண்டார் கனகசுந்தரம்.

குறும்பாகப் பாஸ்கரனைப் பார்த்துச் சிரித்த அந்த 'தாமரை முக'த்தில் வெற்றிக் குறி விளையாடிக் கொண்டிருந்தது.

# கற்பனையும் காரிகையும்



ரா. வீ.

நான் என் தாய் பாஷையில் மிகப் பிரசித்தமான கதை எழுத்தாளனாகக் கருதப்பட்டுவந்தேன். ஒவ்வொரு சின்னஞ் சிறு குக்கிராமத்திலும் கூட பலவந்த நாம்கேயின் புஸ்தகங்களில் ஏதாவது ஒன்றைக் காணுவது கஷ்டமான காரியம் இல்லை. முக்கியமாகப் பிரபல பத்திரிகைகளில் எல்லாம் என் கதைகளுக்கு நல்ல வரவேற்பு உண்டு. மக்களும் வெகு ஆவலுடன் என் கதைகளை விரும்பிப் படித்து வந்தனர். பூனாவில் 'சுடச்சுட' பதில் எழுதுவதில் எனக்குநிகர் நான்தான் என்பது பிரசித்தம்.

பெயரும் புகழும் சம்பாதித்ததோடு மட்டும் அல்ல; வெள்ளியப்பன்களும் வேண்டிய அளவுக்கு நான் சம்பாதித்திருந்தேன். புதவார் பேட்டையில் உள்ள ஒரு தெருவில் என் அழகிய சின்னஞ் சிறு வீடு இருந்தது. நான் என் கதைகளில் கற்பனையைக் கையாளுவது போலவே, என் கதைகளை வாசிக்கும் நேயர்களும் என் வீட்டைப் பற்றியும் என் வீட்டின் அலங்கரிப்பைப் பற்றியும் தங்கள் தங்கள் கற்பனைக்கு வேலை கொடுத்திருப்பார்கள் என்று எண்ணுகிறேன். ஆகவேதான், நானும் நேயர்களின் கற்பனைக் கோட்டையைப் பற்றிக் கற்பனைக் கோட்டை கட்டி என் வீட்டை அலங்கரித்து வைத்திருந்தேன். ஆனால் ஒன்று. என் கற்பனை வெறும் கற்பனைதானா அல்லது அதில் உண்மையும் கலந்திருக்கிறதா என்பதைப் பற்றி யாரும் பிரஸ்தாபித்ததில்லை.

நான் இதுகாறும் மணம் புரிந்து கொள்ளவில்லை. நன்றாகத் தீர ஆராய்ந்து ஆலோசியாமல் கல்யாணம் என்ன! காதல் புரிவதையே கூட நான் விரும்பவில்லை; ஆதரிக்கவும் இல்லை. உண்மை என்னவென்றால், என் கதைகளில் வரும் கற்பனைக் கதாநாயகிகளைப் போலவே நானும் ஒரு காதலியை விரும்பினேன். ஆனால் அம்மாதிரிக் காதலி இது வரை எனக்குக் கிடைக்கவில்லை. அவள் கிடைப்பாளா, கிடைக்க மாட்டாளா! கிடைத்தால் எப்பொழுது கிடைப்பாள்! இது போன்ற கவலைகளும் இதுவரை என் மனத்தில் எழவில்லை. ஆனால் என் உள்ளத்தில் எழுந்த ஒரே ஒரு எண்ணத்தினிடமிருந்து மட்டும் எவ்வளவு முயன்றும் என்னால் விடுதலை பெற முடியவில்லை. எப்பொழுதாவது, யாராவது என் காதுகளுக்கருகில் வந்து, 'அவள் கிடைப்பாள். அவசியம் கிடைப்பாள்' என்று சொல்லி என் நம்பிக்கைப் பயிரில் தண்ணீர் வார்த்துச் சென்று கொண்டிருந்தார்கள். அது முதற்கொண்டு 'இதோ பார்! இவ்வளவு நாட்களாக நீ எதிர்பார்த்துக் கொண்டிருந்தவள் தான் இவள்!' என்று யாராவது வந்து காதில் ஓதிவிட்டுச் செல்ல மாட்டார்களா என்ற நம்பிக்கை என்னை விட்டு அகலுவதே யில்லை.

மேற்கூறிய காரணங்களினால், என் வீட்டில் என்னையும் என் வேலைக்காரனையும் தவிர வேறு மூன்றாவது மனிதர் யாரும் வளைய வளைய வரவில்லை. வீட்டில் எங்கள் இருவருடைய ராஜ்யம்தான் நடந்து கொண்டிருந்தது. 'நீ ஒரு பைத்தியக்காரன் அப்பா!' என்று என் நண்பர்கள் என்னைக் கேலி செய்வார்கள். ஒரு வேளை அவர்கள் சொல்லுவது உண்மையாகவும் இருக்கலாம்; உண்மை இல்லாமலும் இருக்கலாம். எழுத்தாளன் என்று பிறந்துவிட்டால், ஏதாவது ஒரு கிறுக்குத்தனம் அவனிடம் குடி கொண்டிருக்கத்தான் செய்கிறது. எழுத்தாளன் பைத்தியக்கார ஆஸ்பத்

திரியில் அடைபட்டுக் கிடக்க வேண்டிய அளவுக்குப் பைத்தியம் பிடித்துப் பாயைச் சுரண்டவில்லை என்று வேண்டுமானால் சொல்லலாமே ஒழிய அவன் ஒரு பைத்தியத்துக்கு 'மூத்தான்'தான் என்பதை யாரும் ஆட்சேபிப்பதற்கில்லை. ஏனெனில் எழுத்தாளர்களுக்கும் எட்டிய மட்டில் கற்பனை ஓடுகிறது. பைத்தியத்துக்கும் காத தூரம் கற்பனை ஓடுகிறது. இருவருக்கும் உள்ள ஒரே ஒரு சின்ன வித்தியாசம் என்ன வென்றால் பைத்தியக்காரன் தன் விலை மதிப்பற்ற சிந்தனைக் குவியல்களை வெளியிடுவதும் இல்லை; வெளியிட விரும்புவதும் இல்லை. ஆனால் கதை எழுத்தாளன் தன் உள்ளத்தெழும் சிந்தனைக் குவியல்களை வெளியிடச் சிறிதும் தயங்குவதில்லை. அதற்கு நேர்மாறாக, வெளியிட்டால்தான் தன்னுடைய கௌரவம் உயரும் என்றுகூட எண்ணுகிறான். அம்முறையில், நண்பர்களின் கட்சி சரிதான்.

ஆனால் நண்பர்களின் கட்சி சரியானதல்ல என்பதற்கு அத்தாட்சி என்ன வென்றால், அவர்களால் என் இதயத்து உணர்ச்சிகளைச் சரிவரப் புரிந்து கொள்ள முடிவதில்லை என்பதுதான். எப்பொழுதுமே கதை எழுத்தாளனின் இருதயமே இத்தகையதுதான். எத்தனைபேர் அவனுடைய உள்ளத்து உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ள முயலுகிறார்கள்! அப்படி முயலுகிறவர்களை விரல்விட்டு எண்ணி விடலாம். ஆனால் என் நண்பர்கள் இந்த விரல்விட்டு எண்ணிவிடக் கூடியவர்களில் வரவில்லை. அவர்களுக்கு ஒரே ஒரு ராகம் பாடுவதைத் தவிர வேறு ஒன்றும் வராது. எப்பொழுதாவது என்னுடைய புதிய கதை ஒன்று வெளிவந்து விட்டால் என் வீட்டை மொய்த்து விடுவார்கள். "என்ன தாம்லே! ஏதாவது புதிது கிடைத்துவிட்டதோ!" என்று கண்களைச் சிமிட்டிக்கொண்டு கேட்பார்கள்.

கதை எழுத்தாளனின் தலையெழுத்தே இப்படித்தான். அவன் எழுதியதையெல்லாம் அவன் அநுபவத்தில் நடந்தவைகளாகவே வாசிக்கும் நேயர்கள் எண்ணி விடுகிறார்கள். கதையில் யாருக்காவது கல்யாணம் நடக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அதை எழுத்தாளனுக்கு நடந்த கல்யாணமாகவே கருதி விடுகின்றனர். யாருடைய தாயாராவது இறந்து விட்டால் எழுத்தாளனின் தாயாரே இறந்து விட்டதாக எண்ணிவிடுகிறார்கள். யாருக்காவது தூக்குத் தண்டனை யென்றால், வாசக நேயர்கள் எழுத்தாளனுக்கே தூக்குத் தண்டனை கொடுத்து விடுகிறார்கள்!

ஆனால் எனக்கு இந்த விஷயங்களினால் எல்லாம் ஒன்றும் அவ்வளவாக வருத்தம் ஏற்படவில்லை; இதுவரை ஏற்பட்டதும் இல்லை. இவற்றில் எல்லாம் எனக்குத் தனி பெரு ஆனந்தம் இருப்பதாகவே தோன்றியது. எழுத்தாளன் என்பவன் ஒரு பைத்தியந்தானே! பைத்தியத்துக்கு எதுதான் தோன்றாது!

## 2

மழைக் காலம். மழைக்காலத்தில் பூனாவின் அழகைக் காணக் கோடிக் கண்கள்தான் வேண்டும். இந்தக் காலத்தில் பம்பாயிலிருந்து பணக்காரர்கள் பூனாவுக்கு வந்து வசிக்கத் தொடங்குவார்கள். நதிக்கரை, தோட்டங்கள்,— எங்கு பார்த்தாலும் 'கசமுச' வென்று கூட்டமும் கொண்டாட்டமுமாகத்தான் காணப்படும்.

மாலை நேரம். மேகங்கள் ஆகாயத்தில் குழுமியிருந்தன. ஆனால் மழை பெய்வதற்கான அறிகுறியையே காணோம். நான் தேநீர் அருந்திவிட்டுப் பண்ட் கார்டனில் போய் உலாவிவிட்டு வருவதற்காக வீட்டை விட்டுப் புறப்பட்டேன். பண்ட் கார்டன் என்பது சின்னஞ்சிறு நந்தவனம். அது நதிக்கரையில் அணைக்கு அருகில் இருந்ததனால் ரமணீயமாக இருந்தது.

வாசலைத் தாண்டி உள்ளே நுழைந்ததும், என் பார்வை எதிரே சென்றது. என்ன விசேஷம் என்றுதானே கேட்கிறீர்கள்! ஒன்றும் இல்லை. ஒரு யுவதி எதிரிலிருந்த பலகையில் உட்கார்ந்து கையில் புத்தகம் ஒன்றைப் பிரித்து வைத்துக் கொண்டு படித்துக் கொண்டிருந்தாள். நான் அந்தப் பக்கம் பார்வையைச் செலுத்திவிட்டு இரண்டடி முன் எடுத்து வைத்தேன். பின்னாலிருந்து யாரோ, "நில்!" என்று சொன்னதுபோலிருந்தது.

"ஏன்!" என்று கேட்டேன் நான்.

"இதோ பார்!" என்ற குரல் மட்டும் என் காதுகளில் ஒலித்தது.

நான் மறுபடியும் அந்தப் பக்கம் பார்த்தேன். அப்பொழுது அவள் பார்வை புத்தகத்திலிருந்து அறுபட்டு மேலே எங்கேயோ சென்றது. ஆகவே, நான் அவள் உருவத்தை நன்றாகப் பார்க்க முடிந்தது. அவளுடைய விழிகளின் சுழற்சியைக் கூட நன்கு கவனிக்க முடிந்தது. அவளையே நான் சிறிது நேரம் பார்த்தேன். அவள் மறுபடியும் தன் தலையைப் புத்தகத்தில் புதைத்துக் கொண்டாள். நான் மேலே நடந்தேன். இரண்டு அடி எடுத்து வைப்பதற்குள் யாரோ மறுபடியும், "நில்!" என்று சொன்னது காதில் விழுந்தது.

"ஏன்!" என்று மறுபடியும் கேட்டேன்.

"நீ குருடனா!"

"ஏன்!"

"அவள்தான் இவள்!"

எட்டுத் திக்கிலிருந்தும், 'அவள்தான் இவள், அவள்தான் இவள்!' என்னும் சொல் என் காதுகளில் ரீங்காரம் செய்யத் தொடங்கியது. அப்புறம் நதியின் பிரவாகம் அர்த்த மின்றிச் சல சலத்துக் கொண்டு ஓடுவதாக எனக்குத் தோன்றவில்லை. 'கல கல' வென்று சப்தித்துக் கொண்டு ஓடும் நதியும், 'அவள்தான் இவள்!' என்று பறை சாற்றிக் கொண்டு போவதாகவேதான் எனக்குத் தோன்றியது. மரங்களின் பக்கம் திரும்பிச் செவி சாய்த்தேன். 'அவள்தான் இவள்!' என்று அவையும் தலை அசைத்து ஆமோதித்தன. 'உஸ்ஸ்ஸ்!' என்று காற்று சீறிக் கொண்டு வீசியது. அடுத்த கணம் அதுவும் என் காதருகிலே வந்து 'அவள்தான் இவள்!' என்று ஓதிச் சென்றது. இவ்வளவும் உண்மையாக இருக்குமா! எந்தச் சொற்களை இவ்வளவு நாட்களாகக் கேட்க வேண்டும் என்று துடிதுடித்துக் கொண்டு வெகு ஆவலுடன் காத்திருந்தேனோ, எந்தச் சொற்களை இன்று என் காதுகள் கேட்டனவோ, அவை வெறுங் கற்பனையாகப் பொய்த்துப் போய் விடாமல் இருக்க வேண்டுமே என்ற கவலை என் மனத்தில் எழுந்தது. இதை

உணர்ந்த என் இருதயம் என் மார்பை ஒரு உதை உதைத்து, 'கற்பனையும் இல்லை; விற்பனையும் இல்லை. அவள் தான் இவள்!'' என்றது.

நான் அடிமேல் அடி எடுத்து வைத்து அந்தப் பக்கம் சென்றேன். அவள் பலகையின் ஒரு ஓரத்தில் உட்கார்ந்திருந்தாள். நான் இன்னொரு ஓரத்தில் உட்கார்ந்தேன். அவள் புத்தகத்திலிருந்து தன் பார்வையை அகற்றவில்லை. நான் தொண்டையைக் கனைத்துக் கொண்டேன்; அவள் அசைந்து கொடுக்கவில்லை. நான் சற்று உரக்க இருமினேன். அப்பொழுதும் அவள் பொருட்படுத்தவில்லை. நான் செருப்பினால் பலகையைத் தட்டினேன். அப்பொழுதாவது அவள் அசைந்து கொடுத்தால்தானே! ஐந்து நிமிஷம் ஆயிற்று; பத்து நிமிஷம் ஆயிற்று. அப்பொழுதும் அவள் தலை தூக்கவில்லை. நான் கலக்கமுற்றேன். அவள் கையில் அப்படி என்ன ரஸமான புத்தகம் இருக்கிறது! தலை நிமிர்ந்து பார்க்காமல் புத்தகத்திலேயே ஒன்றிப் போயிருக்கிறாளே!

இதை நினைத்ததுதான் தாமதம்; அந்தப் புத்தகத்தை எழுதினவன் மீது எனக்குக் கோபம் கோபமாக வந்தது. ஒரு வேளை அவளும் கதை எழுத்தாளன் தானோ, என்னவோ என்ற எண்ணத்தில் புத்தகத்தின் பெயரைப் பார்ப்பதற்காகச் சற்றுக் குனிந்தேன். எனக்கு ஏற்பட்ட வியப்புக்கு ஓர் எல்லை இல்லை. அந்தப் புத்தகம் சாக்ஷாத் நானே எழுதியது. அதைப் பார்த்ததும் முதலில் எனக்கு வியப்பாக இருந்தது. அடுத்தபடியாகச் சிரிப்பு வந்தது. அதற்கடுத்தபடியாக மகிழ்ச்சியும் பெருமிதமும் உண்டாயிற்று. ஒளித்துப் பயன் என்ன! என் தலை கர்வத்தினால் கொஞ்சம் கனக்கக் கூடக் கனத்தது. அவளைக் கதையிலேயே ஒன்றிப் போகும்படி செய்திருக்கும் கதைகள் என்னுடைய கதைகள் அல்லவா! இந்த நினைவு எழுந்து என் உள்ளத்துக்கு உற்சாகத்தையும் துணிவையும் உண்டாக்கியது. பெண்ணைப் போல நாணிக் கோணிக் கொண்டு பலகையின் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்த நான் வெட்கத்தையெல்லாம் ஒரு புறம் மூட்டை கட்டி வைத்துவிட்டு தைரியமாகப் பாதிப் பலகையை அடைத்துக்கொண்டு உட்கார்ந்தேன். பிறகு இன்னும் ஒரு தடவை இருமினேன். இந்த இருமலில் வெட்கமும் இல்லை; சங்கோசமும் இல்லை. அப்பொழுது என் இருமலுக்கு எங்கிருந்தோ ஒரு தனிப் பலம் வந்து விட்டது. ஆயினும் அவள் அசைந்து கொடுக்கவில்லை. சிறிது நேரம் கழித்து நான் அவளைப் பார்த்து, ''இன்று இயற்கைக் காட்சிகள் எவ்வளவு இன்பகரமாயிருக்கின்றன!'' என்றேன்.

அவள் வாய் திறக்கவில்லை. நானும் சிறிது நேரம் பேசாமல் இருந்தேன். பிறகு, ''இன்று மேகங்கள் சூழ்ந்து சூழ்நிலை மனோரம்யமாக இருக்கிறதல்லவா!'' என்று ஆரம்பித்தேன்.

அப்பொழுதும் அவளுக்கு என்ன நெஞ்சழுத்தம்! வாயைத் திறக்கவில்லையே, அவள்! நானே தான் பேசிக் கொண்டிருக்க வேண்டுமா! நான் பையிலிருந்து கடிகாரத்தை எடுத்து முன்னைப் பின்னும் திருப்பினேன். பிறகு, ''அடே! மணி இரண்டுதானே ஆகிறது! கடிகாரம் நின்று போய்விட்டதா, என்ன!'' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன்.

அவள் வாய் திறந்து பேசவில்லை. ஆனால் இந்தத் தடவை புத்தகத்திலிருந்து அரைக் கண்ணை அழகாக உயரத்தூக்கி என்னை ஒரு முறை பார்த்தாள். எனக்குத் துணிவு இன்னும் அதிகமாகியது. உடனே நான், ''மன்னிக்கணும், உங்களிடம் கடிகாரம் இருக்கிறதா!'' என்று கேட்டேன்.

''இருக்கிறது'' என்று மிகவும் மெதுவான குரலில் சொன்னாள் அவள். ஆனால் ஏறிட்டு என்னைப் பார்க்கவில்லை. மறுபடியும் அங்கே அமைதி நிலவி விட்டது. அவள் கையிலிருந்த புத்தகம் மறைவுக்குச் சாதனமாக உபயோகப்பட்டது. அந்தப் புத்தகம் மட்டும் என்னுடைய புத்தகமாக இல்லாமலிருந்திருந்தால் எழுதினவனை வாயில் வந்தபடியெல்லாம் திட்டியிருப்பேன்.

கடைசியில் நானாகவே, ''என்னைப் போன்ற முட்டாள் ஏழேழு பதினாலு உலகத்திலும் இருக்க முடியாது. படித்த பெண்கள் என்றால் கட்டாயம் கடிகாரம் இருக்கும் என்ற இந்தச் சின்ன விஷயம் எனக்குத் தெரிந்திருக்க வேண்டாமா! நான் நேராக மணியைக் கேட்டிருக்க வேண்டும். இப்படிச் சுற்றி வளைத்துக் கேட்டது என் முட்டாள் தனம்தானே!'' என்று சொல்லிக் கொண்டேன்.

''ஆமாம்!'' என்றாள் அவள். ஆழப் பதியும் அம்பு போல என்ன குத்தலான பேச்சு! குத்தலாகப் பேச எனக்குத்தான் தெரியும். குத்திப் பேசுவதில் எனக்கு ஈடு நான்தான் என்று இன்று வரை நான் எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் இன்று இவள் என் முதுகுக்கு மண் காட்டி விட்டாளே! நான் சிறிது வெட்கிப் போய், ''மணி என்ன ஆகிறது என்று தயவு செய்து சொல்ல முடியுமா!'' என்று கேட்டேன்.

''முடியும்!'' என்று சொன்னவள் வாய் மூடி மௌனியாகி விட்டாள்.

''என்ன மணி யாகிறது!''

''ஆறரை!''

இதைச் சொன்னதும் பட்டென்று அவள் புத்தகத்தை மூடி வைத்து விட்டாள். பிறகு ஆகாயத்தை அண்ணாந்து பார்க்கலானாள்.

''புத்தகம் படித்து முடித்தாகி விட்டதோ!'' என்று கேட்டேன் நான்.

''முடித்தாகி விட்டது!''

''ஏதாவது நாவலோ!''

''இல்லை, கதைகள்!''

''கதைகள் ரொம்பப் பிடிக்குமோ!''

''ஆமாம், ரொம்ப ரொம்பப் பிடிக்கும்!''

''என்ன புத்தகமோ!''

''ரோஜா மொட்டுகள்!''

''ரொம்ப ரஸமாயிருக்கிறதோ!''

''ரொம்ப ரஸமாகத்தான் இருக்கிறது!''

''எழுதினது யாரோ!''

அவள் பதில் சொல்லுவதற்குள்ளாகவே, ஒன்றிரண்டு தூற்றல் அக்ஷதை போலப் போடத் தொடங்கி விட்டது. இந்த எழவு தூற்றல் இப்படி நல்ல சந்தர்ப்பத்தில்தானா வர வேண்டும்! கட்டிய கோட்டையை யெல்லாம் குட்டிச்சுவராக்கி விட்டதே! அதற்குள் அவள் பதற்றத்துடன் பலகையிலிருந்து எழுந்தாள்.

"என்ன புறப்பட்டு விட்டீர்களோ !"

"ஆமாம் !"

"மழைக்குப் பயந்தா ?"

"வீட்டுக்குப் போக வேண்டும் அல்லவா !"

"என்னுடன் வருவதற்கு ஆட்சேபனை ஒன்றும் இல்லையென்றால் வாருங்கள். என் வண்டி வாசலில் நின்று கொண்டிருக்கிறது. நான் உங்களை வீட்டுக்குக் கொண்டு போய் விட்டு விடுகிறேன்."

"உன் வண்டியா !" அவள் அலட்சியமாக கேட்டாள். என்னிடம் வண்டி இருக்கக் கூடும் என்னும் விஷயத்தில் அவளுக்கு என்னளவும் நம்பிக்கை ஏற்படவில்லை. "ஆமாம், என் வண்டிதான் !" என்றேன் நான்.

"என் வண்டி கூட வந்திருக்கும். ஒரு வேளை அது வெளியில் நிற்கிறதோ, என்னவோ !" என்று வேடிக்கையும் வினையும் ததும்பச் சொன்னாள் அவள்.

"உன் வண்டியா !" என்று நான் கேலியாகக் கேட்டேன்.

"ஆமாம், என் வண்டிதான். உனக்கு ஏன் இந்தச் சந்தேகம் !" என்று அடித்துச் சொன்னாள் அவள்.

உன்னிடம் வண்டி இருக்கும் என்று நான் கனவிலும் கருதவில்லை !"

"என்னை யாரென்று நினைத்தாய் !" என்று இறுமாப்புடன் கேட்டாள் அவள்.

"உன்னையா ! யார் என்று ! நான் சொல்லட்டுமா !" என்று கேட்டேன்.

"நீ சொல்ல வேண்டாம். நானே சொல்லி விடுகிறேன் !" என்றாள் அவள்.

"சொல்லு !" என்றேன் நான்.

"நான் உலகப் பிரசித்தி பெற்ற ஒருவரின் மனைவி !" என்று அவள் பதில் அளித்தாள்.

"என்ன ! மனைவியா !" என்று பதற்றமுற்றுக் கேட்டேன் நான்.

"ஆமாம், மனைவி !" என்றாள் அவள்.

"மனைவியா ! இல்லை, இல்லை. நீ தவறிச் சொல்லுகிறாய். மனைவி இல்லை, பெண்ணா யிருப்பாய் !" என்றேன் நான்.

"மனைவிதான் ! பெண் இல்லை, மனைவிதான் !"

"அப்படியானால் உனக்குக் கல்யாணம் ஆகி விட்டதா !" என்றேன் நான்.

"ஆகி எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டது !"

"அந்த அதிர்ஷ்டசாலிப் பேர்வழி யாரோ !"

அவள் சற்றுக் கலங்கினாள். அவள் பொய் சொல்லுகிறாள் என்பதை நான் கண்டு கொண்டேன். அவள் 'கட கட' வென்று முன்பின் யோசியாமல் ஏதோ சொல்லி விட்டாள். ஆனால் இந்தக் கேள்வி கேட்கப்படலாம் என்ற எண்ணமே அவள் உள்ளத்தில் எழவில்லை. அந்தக் 'காபரா'வில் அவள் தன் பார்வையைப் புத்தகத்தில் புதைத்தாள். அவளுடைய முகத்திலே முல்லை முறுவல் படர்ந்தது. "நான் தான் சொன்னேனே, என் கணவர் மிகப் பிரசித்தி பெற்ற பேர்வழி என்று !" இவ்வாறு அவள் மறுபடியும் பேச்சைத் தொடர்ந்தாள்.

"யாராவது மந்திரியோ !"

"இல்லை !"

"ஆலை முதலாளியோ !"

"இல்லை !"

"வழக்கறிஞரோ !"

"வழக்கறிஞரும் இல்லை !" என்றாள் அவள்.

"அப்படியானால் வைத்தியரோ !" என்றேன்.

"இல்லை ! வைத்தியரும் இல்லை !"

"அப்படியானால் யார் !"

"ஒரு கதை எழுத்தாளர் !"

"கதை எழுத்தாளரா !"

"ஆமாம், கதை எழுத்தாளர்தான். அவருடைய கதை என்றால் ஜனங்களுக்கு ஒரே பைத்தியம். அவருடைய கதை எப்பொழுது படிக்கக் கிடைக்கும் என்று சாதகப் பட்சி போல் தவிப்பார்கள். அவருடைய கதைகள் உள்ளத்தை உருக்குலைத்து விடும் ; உலுக்கி விடும். உருக்கிவிடும். சிரிப்பவர்களை அழவைத்துவிடும். அழுபவர்களைச் சிரிக்கவைத்து விடும். அப்பேர்ப்பட்ட கதைகள் !"

"அப்படியா ! அப்படியானால் நீ மிக மிக பாக்கியசாலிதான் ! இப்படிப்பட்ட புருஷன் கிடைப்பது என்பது சாதாரண விஷயமா ! ஆமாம். அந்த எழுத்தாளர் யாரோ !"

அவள் புஸ்தகத்தை என் பக்கம் நீட்டி என் பெயரையே காட்டி, "நீயே படித்துப் பார்த்துக்கொள் !" என்றாள்.

"பலவந்த தாம்லேயா ! அவரா உன் கணவர் !" என்று கேட்டேன்.

"ஏன் ! உனக்கு அவரைத் தெரியுமா, என்ன !" என்று பதற்றத்துடன் கேட்டாள்.

"நான் அவருடைய பெயரைக் கூடக் கேட்டதில்லையே ! — அதிருக்கட்டும். நீ அவரைப் பார்த்திருக்கிறாயா !" என்று கேட்டேன்.

"'பார்த்திருக்கிறாயா !' என்று கேட்கிறாயே ! என்ன அசட்டுக் கேள்வி இது ! ஒருத்தி தன் கணவரைப் பார்த்திருக்க மாட்டாளா, என்ன !" என்றாள் அவள்.

"அதற்குச் சொல்லவில்லை. வந்து......"

"என்ன 'வந்து, வந்து' வேண்டிக் கிடக்கிறது ! இப்பொழுதுதான் நான் அவரை வீட்டில் விட்டு விட்டு வந்திருக்கிறேன் !"

"அவர் உன்னுடன் உலாவ வருவதில்லையா !"

"அவர் கதை எழுதிக் கொண்டிருக்கிறார் !"

"நல்ல கணவர் ! இத்தனை அழகிய மனைவியைத் தனியாக உலாவ அனுப்புகிறாரே ! உன்னைக் காட்டிலும் அவருக்குக் கதைகளிடம் தான் அதிகப் பிரியமோ !"

"இதோ பார் ! என் கணவரைப் பற்றி இப்படிக் கண்டபடியெல்லாம் பேசாதே !" என்று சீறினாள் அவள்.

"நீ அவரை உயிருக்கு உயிராகக் காதலிக்கிறாயோ !" என்றேன் நான்.

"ஆமாம், நான் என்ன ! அவருடைய கதையைப் படித்த ஒவ்வொருவனுமே அவரை உயிருக்கு உயிராகத்தான் மதிப்பான்."

"நான் அவருடைய கதையை இதுவரை படிக்காதது என் அதிர்ஷ்டக் குறைவுதான் !"

தூற்றல் வரவர அதிகமாகத் தொடங்கியது. "என் வண்டி வந்திருக்கும். நான் போய் வருகிறேன்" என்று சொல்லி எழுந்தாள்.

"அப்படியானால் அடிக்கடி நாம் சந்திக்க முடியாது. ஏனென்றால் நீயோ ஒரு பெரிய மனிதரின் மனைவி. நானோ மிக மிகச் சாதாரண மனுஷ்யன். அப்படியிருக்கும் பொழுது நாம் அடிக்கடி எப்படிச் சந்திக்க முடியும் !"

"முடியாதுதான் !" என்று அழுத்தந் திருத்தமாகச் சொல்லி விட்டு அவள் வேகமாக அவ்விடத்தை விட்டு அகன்றாள். (தொடரும்)

உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிருர்கள்...



பணத்தினுல் வாங்கக்கூடிய ஆனந்தத்தையும், மிக திருப்தியான அனுபவத்தையும் ஜில்லெட் நிச்சயமாகத்தரும் என்று வாழ்வில் வெற்றிபெற்ற மனிதர்களுக்குத்தெரியும். ஆயினும் இதன் விலை மிகவும் சரசமாயிருக்கிறது. அதனுல் தினமும் ஒவ்வொரு மனிதனுக்கும் அதிகப்பணச் செலவின்றி கிடைக்கும் ஒரு சுகபோகமாகும். ப்ளு ஜில்லெட் பிளேடுகளை வாங்கி உபயோகியுங்கள். உலகில் மிகவும் நாகரீகமான மனிதர்களின் விரும்பத்தக்க கூட்டத்தில் சேருங்கள்




# ப்ளூ ஜில்லெட் பிளேடுகள்

5 பிளேடுகளுக்கு 14 அணு

Edited, Printed and Published by R. Krishnamurthy at The "Kalki" Press
116 - 119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. NO. M. 4392

# வெகு நேர்த்தியான ருசியுள்ள பான்கேக்கள்





## டால்டாவில் தயாரித்தவை!

டால்டா தித்திப்பு பண்டங்களையும், ஆகாரவகைகளையும் மிகருசிகரமாகவும், மேன்மையாகவும் செய்கிறது. எவ்வித சமையலுக்கும் உபயோகப் படக்கூடிய, சுத்தமான, ஊட்டம் அளிக்கும் கொழுப்பு. கைகள் படாமல் சீல் செய்த டின்களில்தான் விற்பனை ஆகின்றன






### இவ்விதம் தயாரிப்பதில் கஷ்டமில்லை

எவ்வித மாவிலும், தயிர், உப்பு, சமையல் சோடா உப்பு கலந்து, மெல்லிய வட்டங்களாக செய்யவும் வேகவைத்ததும், மசாலைகள் நிறைந்த, இறைச்சி துண்டுகளையோ, பிசைந்த, உருளைக்கிழங்கையோ, முட்டை பணியாரத்தையோ, வட்டங்களின்மேல் பரப்பவும். கெட்டியாக சுருட்டி காய்ந்த சிறு ரொட்டித் துண்டுகளின்மேல் உருட்டி, பிறகு ஒரு அங்குல துண்டுகளாக நறுக்கி, சூடான டால்டாவில் முறுகலாகும்வரை சுடவும். எலுமிச்சம்பழ ரசத்தைபிழிந்து வழங்கவும்.

**இதை வாங்காமல் இராதே!**

புதிய டால்டா சமையல் புத்தகம்— ஆங்கிலத்தில்-சித்திரங்கள் நிறைந்தது-ஆர்ட் காகிதம்-80 பக்கங்கள் -300 சமையல் வகைகள்-தேகசுகம், சுகாதாரம், சமையலறை பற்றிய குறிப்புகள்- ஒரு ரூபாய்தான், தபால் செலவு 8 அணா தனி.



டால்டா அட்வைசரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1